# கொலம்பியா வெளியீடு

மாடர்ன் தியேட்டர்ஸ்

# சுபத்ரா

டாக்கி பாட்டுகள்



## K.L.V. வஸந்தா
## C.S. கணேச பாகவதர் பாடியது

GE.6267
கண்டேன் கண்டேன்
கேலி பிழைப்பானதேன்

GE.6268
அஞ்சு வயது
அருள்வாய்

GE.6269
மச்சாவதாரமான
(2 பாகங்கள்)

GE.6270
பெரியோர்
ஆடவர் உலகில்



GARAO

## ஸரஸ்வதி ஸ்டோர்ஸ், மதறாஸ்,

மேற்கண்ட ரிகார்டுகள் எங்களிடமும் கிடைக்கும்:

மெஸர்ஸ். என். ராஜன் & கோ., 48-D, காவல்ரி ரோடு, பெங்களூர் கண்டோன்மெண்ட்

# குறித்த நேரத்தில் லாரிகள்



| | | |
|---|---|---|
| திருச்சி | — | மதுரை |
| மதுரை | — | திருநெல்வேலி |
| மதுரை | — | தூத்துக்குடி |
| திண்டுக்கல் | — | கோயமுத்தூர் |
| கோயமுத்தூர் | - | கள்ளிக்கோட்டை |
| கோயமுத்தூர் | — | பாலக்காடு |
| திருச்சி | — | சென்னை |
| திருச்சி | — | பெங்களூர் |

யுத்தகால ஆறு வருஷங்களில்
௬ கோடி பிரயாணிகளை பத்திரமாக




கொண்டுபோய் சேர்த்திருக்கிறார்கள்,
இப்பொழுது குறித்த நேரத்தில் சாமான்களை
கொண்டுபோய்ச் சேர்க்கிறோம்




போக்கு வரத்தை துரிதப்படுத்தி வியாபாரத்தை பெருக்குவது
எடுத்துப் போவதை எங்களிடம் ஒப்படையுங்கள்

**T.V. சுந்தரம் அய்யங்கார் & ஸன்ஸ் லிட்**

மதுரை & சென்னை

போக்கு வரத்து சாதன மளிப்பது எங்கள் தொழில்



நீண்ட

பிரகாசமுள்ள

கூந்தலுக்கு



ஸ்வஸ்திக்

பரிமள காஸ்டராயில்

ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ், லிமிடெட், பம்பாய் 15,

N.A.S, 152/5

சேல்ஸ் டிப்போ: 158 B, பிராட்வே, மதராஸ்.

# இருமலை
## அதன் மூலத்திலேயே தாக்குங்கள்



பெக்டுஸின் இருமலுக்கு ஆசுவாஸமளிக்கவும், அதன் கடுமையைக் குறைக்கவும் செய்கிறது. அதில் ஓர் மூலாதாரமான புதிய நாசகப் பொருள் அடங்கியுள்ளதானது, சுவாசக் குழாய்களையும், சுவாசாசயங்களையும் சுத்திகரணம் செய்து, தடங்கலின்றி சுகமாக மூச்சுவிடத் துணைக்கிறது.

ஜலதோஷம், இன்ப்ளுயன்ஸா ஜுரம், பீனசம், கக்குவான் இருமல்—இந்நோய்களுக்கும் பெக்டுஸின் குணகரமானது. இன்றே ஒரு பாட்டில் வாங்கிப் பரீக்ஷித்துப் பாருங்கள்.






**Pectusyn**

**பெக்டுஸின்**
**காப் ஸிரப்**

SYNTETIC

**ஸின்டெடிக் (இந்தியா) லிட்., பம்பாய் 7.**

---

சென்னை மாகாணத்திற்கு சோல் டிஸ்ட்ரிப்யூட்டர்கள் :

**கே. கே. பிள்ளை & கம்பெனி, ராயப்பேட்டை, மதராஸ்**

---

8KC. 6324





| மலர் 5<br>இதழ் 35 | 1946 ஏப்ரல் 7 | பார்த்திப<br>பங்குனி 25 |
| --- | --- | --- |




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனையே.

பம்பாயிலிருந்து சுமார் 250 மைல் வடகிழக்கேயுள்ள அஜந்தா மலையில், மனிதர்கள் இலேசில் புகமுடியாத அந்தரங்கப் பிராந்தியத்தில், பாறைகளைக் குடைந்து புத்த சைத்தியங்களும் விஹாரங்களும் அமைக்கப் பட்டிருக்கின்றன. அந்த சைத்தியங்கள் — விஹாரங்களின் சுவர்களிலே தீட்டப் பெற்றிருக்கும் ஓவியங்கள் உலகத்தின் மகா அற்புதங்களில் சேர்க்கப்பட வேண்டியவை. ஆயிரத்தைந்நூறு வருஷங்களுக்கு மேலாகியும் மேற்படி சித்திரங்களின் வர்ணம் மங்காமல் நேற்று எழுதியவைபோல் பளபளப்புடன் பிரகாசிக்கின்றன.




அத்தகைய அதிசய அஜந்தா சித்திரங்கள் பெரும்பாலும் புத்த பகவானின் புனித வாழ்க்கையையும், அவருடைய பூர்வ ஜன்மங்களின் வாழ்க்கைகளையும் சித்திரிப்பனவாகும். புத்தருடைய வாழ்க்கையோடு சம்பந்தமின்றி அந்தக் காலத்துச் சமூக வாழ்க்கையைச் சித்திரிக்கும் ஓவியங்கள் சிலவும் இருக்கின்றன. மேற்படி ஓவியங்கள் எல்லாம் எந்தெந்தச் சரித்திர சம்பவத்தை அல்லது சமூக வாழ்க்கைச் சம்பவத்தைக் குறிப்பிடுகின்றன என்பதைப் பெரும்பாலும் கண்டு பிடித்து ஆராய்ச்சிக்காரர்கள் எழுதி யிருக்கிறார்கள்.

ஆனால் ஆராய்ச்சிக்காரர்களின் ஆராய்ச்சிகளினால் கண்டு பிடித்து விளக்க முடியாத சித்திரங்கள் சிலவும் இருக்கத்தான் செய்கின்றன. அவற்றில் ஒன்றுக்கு "நடனப் பெண்ணின் தண்டனை" என்ற பெயர் அளிக்கப்பட்டிருக்கிறது. இந்தச் சித்திரத்தின் வரலாறு விளங்கவில்லை என்று அஜந்தா சித்திர ஆராய்ச்சியாளர் பலர் கைவிட்டு விட்டார்கள். இதற்குக் காரணம், "சிவகாமியின் சபதம்" எற்கெனவே எழுதப்படாததுதான் என்று சொல்லக் கூடும்!

ஓரளவு சிதைந்து போயிருந்த மேற்படி "நடனப் பெண்ணின் தண்டனை" என்ற சித்திரத்தை, அஜந்தாவுக்கு நேரில் சென்று பல தினங்கள் இருந்து பார்த்து விட்டு வந்த சித்திரக்காரர் "மணியம்" தம் கற்பனையினால் பூர்த்தி செய்து தமது அட்டையில் சித்திரித்திருக்கிறார். அந்தச் சித்திரத்தின் பொருளையும் வரலாற்றையும் இந்த இதழில் வெளியாகி யிருக்கும் "சிவகாமியின் சபதம்" முப்பத்திரண்டாம் அத்தியாயத்தில் காணலாம்.

# அஜாக்ஸ்

## தூய எமெரி பவுடர்

நெல் அரைக்கும் இயந்திரங்களுக்கும்
இதர இயந்திரத் தொழிற்சாலைகளுக்கும்



7 பவுண்ட் பைகளில் கிடைக்கும்

## அஜாக்ஸ் ப்ராடக்ட்ஸ் லிட்.,

106, அரண்மனைக்காரத் தெரு : மதராஸ்

மானேஜிங் ஏஜண்டுகள்:

## முருகப்பா & சன்ஸ்

மேற்கண்ட விலாசத்திற்கு எழுதவும்:

**மெஸர்ஸ். மார்ஷல் ஸன்ஸ் & கோ,**
**(இந்தியா) லிமிடெட்.,**

தபால் பெட்டி 141 :: சென்னை




மலர் 5 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 35

# என்ன சேதி?

## மகான்கள் தலையெழுத்து!

சமீபத்தில் காந்திஜி பம்பாய்க்குப் போயிருந்தபோது, சிலர் அவருக்குக் கறுப்புக் கொடி பிடித்ததாகவும் அவர் தங்கியிருந்த குடிசை மேலே கற்களை வீசியதாகவும் செய்தி வந்திருக்கிறது.

அது மாத்திரம் அல்ல. அந்தக் குடிசையையே கொளுத்தவும் சிலர் முயன்றார்களாம்.

அப்படிக் கொளுத்த முயன்றவர்கள் வேறு யாருமல்ல, காந்திஜியின் அன்புக்கு மிகவும் பாத்திரமான ஹரிஜனங்கள்தான் என்பதை அறியும்போது நமக்கு உண்டாகும் அதிசயத்துக்கு அளவேயில்லை.

அப்படி காந்திஜி ஹரிஜனங்களுக்கு என்ன தீங்கு செய்திருப்பார்!

சென்ற இருபது இருபத்தைந்து வருஷ காலமாக அவர் ஹரிஜன சேவையையே தமது வாழ்க்கை லட்சியமாகக் கொண்டு அல்லவா வாழ்ந்து வந்தார்!

"பிர்லா மாளிகையில் வசிப்பதைக் காட்டிலும், இனி தோட்டிகளின் மத்தியிலேயே வாழ்வேன்" என்றல்லவா கூறினார்!

அப்படியிருக்கும்போது, காந்திஜி தங்கியிருந்த குடிசையைக் கொளுத்த அந்த ஹரிஜனங்கள் முயன்றதற்குக் காரணம் என்னவாயிருக்கும்?

அதற்கு ஒரே ஒரு காரணம் இருக்கிறது!

அது காந்திஜி ஒரு பெரிய மகான் என்ற காரணமேயாகும்.

மகான்களுடைய தலையெழுத்தெல்லாம் ஒரே மாதிரியாகவே இருக்கும். அதாவது, அவர்கள் உயிரோடிருக்கும் காலத்தில் அவர்களுக்குச் சேரவேண்டிய நியாயமான புகழ் கிடைக்காது, மரியாதை கிடைக்காது.

ஒன்று, உலகம் அவர்களைச் சிலுவையில் அறைந்து கொல்லும்; அல்லது வேறு ஏதாவது ஒருவகையில் அவமரியாதை செய்யும்.

எல்லா மகான்கள் விஷயமும் இப்படியிருக்கும்போது காந்திஜி மட்டும் இதற்கு எப்படி விதிவிலக்காக முடியும்?

## இங்கு மாத்திரம் என்ன?

பம்பாய் மாகாணத்தையும் பம்பாய் ஹரிஜனங்களையும் நாம் ஏன் குறை கூற வேண்டும்?

இந்த விஷயத்திலே நம் சென்னை மாகாணம் பம்பாய் மாகாணத்தைக் காட்டிலும் ஒரு படி முன்னேறியல்லவா யிருக்கிறது!

பம்பாய் மாகாணத்திலே காந்திஜி தங்கியிருந்த குடிசையை மாத்திரம் எரிக்க முயன்றார்கள்.

அந்தக் குடிசைமேலே கல்லை மாத்திரம் வீசியெறிந்தார்கள்.

ஆனால், சென்னை மாகாணத்திலோ சிலர் அவருடைய உருவப் படத்தையே எரித்தார்கள்.

தமிழ் நாட்டு அரசியல் நிலைமை சம்பந்தமாக அவர் தம்முடைய மனதிலிருந்த அபிப்பிராயத்தை வெளியே தெரிவித்ததற்காக, அவர்மீது பரம பக்தி பூண்ட அவருடைய சிஷ்யர்களே அவரைத் தூற்ற முயன்றார்கள்.

அப்படியிருக்கும்போது, பம்பாயில் நடந்ததைப் பார்த்து நாம் அதிசயப்படுவதற்கு என்ன இருக்கிறது?

சென்ற இதழில் வெளியான காலக்ஷேபத் துணுக்குக்குப் பரிசு பெற்றவர்: எஸ். ஆர். மோஹன்ராம், 158, நயினியப்ப நாயக்கன் தெரு, பி. டி. மதராஸ்.

# நிகழ்ச்சிச் சித்திரம்







பிரிட்டிஷ் மந்திரிகளுடன் இந்திய அரசியல் தலைவர்களின் போர் ஆரம்பமாகிவிட்டது.

-உம்மன்



ஸர். ஸி. பி. ராமஸ்வாமி அய்யர் காந்திஜி, நேரு, படேல்
போன்ற நமது தலைவர்களுடன் பூரணமாக
ஒத்துழைப்பதாக வாக்களித்திருக்கிறார்.



ஸர். முகம்மது உஸ்மான் லீகின் காதலை விரும்புகிறார்.
தயவு செய்து எனக்குக் கொஞ்சம் இடம் கொடுங்கள்.


கோதுமை
அரிசி
அரிசி
கோதுமை
அரிசி
கோதுமை
ஸர். ராமசாமி முதலியார்
லட்சக்கணக்கான இந்தி
யர்களின் பஞ்சத்தை நிவர்த்
திக்க தம்முடைய பெரு முயற்சி
மூலம் கொஞ்சம் நம்பிக்கை
யூட்டுகிறார்.

# பெயரை மாற்றவும்

ஐக்கிய தேச மகா சபை என்று ஒரு சபை இருக்கிறது அல்லவா?

அது இந்தோனேஷியாவுக்குப் பட்டை நாமத்தைக் குழைத்துப் போட்டது அல்லவா?

அத்துடன் அது தனக்கும் போட்டுக் கொண்டது அல்லவா?

அது இப்போது துணிகரமாக மற்றொரு காரியமும் செய்திருக்கிறது.

அதாவது ஈரானுக்கு அந்தப் புகழ் பெற்ற பட்டை நாமத்தைக் குழைத்துப் போடவில்லை!

இப்போது அது ஈரானுக்கு உதவி செய்தே தீருவதென்றும் ஈரானுடைய சுதந்திரத்தைப் பாதுகாத்தே மறு காரியம் பார்ப்பது என்றும் சங்கல்பம் பூண்டிருக்கிறது.

அதன் விளைவாக, அது முப்பெரும் வல்லரசுகளில் ஒன்றாகிய ருஷ்யாவின் எதிர்ப்பையும் பொருட்படுத்தவில்லை.

ருஷ்யப் பிரதிநிதியாகிய குரோமிகோ சபையிலிருந்து வெளியேறிச் சென்றதையும் லட்சியம் பண்ணவில்லை.

ஐக்கிய தேச மகாசபையின் தைரியத்தை நாம் புகழ்கிறோம்.

சிறு நாடுகளின் சுதந்திரத்தில் அதற்குள்ள அக்கறையைக் கண்டு பரவசமடைகிறோம்.

சமாதானத்திலே அதற்குள்ள அளவு கடந்த பிரியத்தைக் கண்டு மெய் மறந்து மூர்ச்சையாகிப் போகிறோம்.

* * *

ஆனால், இதில் நமக்கு ஓர் அதிசயம் உண்டாகிறது. அத்துடன், சந்தேகம்கூட ஒரு பக்கத்தில் உண்டாகிறது.

ஆமாம், ஈரானை விட்டு வெளியேற வேண்டுமென்று ருஷ்யாவை ஏன் வற்புறுத்த வேண்டும்?

ருஷ்யாவை விரோதித்துக் கொள்ளாமலும் அது தானாகவே ஈரானை விட்டுக் கிளம்புவதற்கும் வழி இருக்கும்போது, அதுவும் மிகச் சுலபமான வழி இருக்கும்போது ஐக்கிய தேச மகாசபை அதை ஏன் பின்பற்றவில்லை?

அதற்குப் பதிலாக, கழுத்தைச் சுற்றி ஏன் மூக்கைத் தொட வேண்டும்?

வல்லரசுகளுக்கிடையே, இல்லாத மனக் கசப்பையெல்லாம் ஏன் உண்டாக்க வேண்டும்?

அப்படி மனக் கசப்பை உண்டாக்குவதன் மூலம் மற்றொரு யுத்தத்துக்கு ஏன் அடிகோல வேண்டும்?

* * *

ஈரான்-ருஷ்யத் தகராறைக் கவனிப்பதற்கு முன்னால் இதற்கு மூலாதாரமாயிருக்கும் மற்றொரு விஷயத்தைக் கவனிக்க வேண்டியது அவசியமாகும்.

சென்ற மகாயுத்தத்தின் காரணமாக ஐரோப்பிய வல்லரசுகள் வேறு முக்கியமான பாடம் எதுவும் கற்றுக் கொள்ளாவிட்டாலும் ஒரு பாடத்தை மாத்திரம் கற்றுக் கொண்டிருக்கின்றன.

அதாவது இன்னொரு மகா யுத்தம் வரும் என்பதேயாகும்.

வரப்போகும் அந்த மகா யுத்தத்திலிருந்து தங்களைப் பாதுகாத்துக் கொள்வதற்காக ஒவ்வொரு நாடும் இப்போதிருந்தே பந்தோபஸ்து ஏற்பாடுகள் செய்யத் தொடங்கியிருக்கிறது.

இதில் யாருக்கும் ஆட்சேபம் இருப்பதற்கு இடமில்லை.

ஆனால், துர்ப்பாக்கிய வசமாக இதில் ஒரு சங்கடம், இடையூறு குறுக்கே நிற்கிறது.

ஒரு வல்லரசு தன்னைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டுமானால் அது மற்றொரு நாட்டின் தலையிலே கையை வைக்க வேண்டியதாயிருக்கிறது.

அந் நாட்டிலே ராணுவ தளங்களையும் பெறவேண்டியதாயிருக்கிறது.

அதன் விளைவாகப் பல தொல்லைகளும் தொந்தரவுகளும் நேருகின்றன.

இன்றைய நிலைமைக்கு இதுவே காரணம்.

* * *

ஆனால், ருஷ்யா ஈரானிலே கொண்டு போய்த் தன் துருப்புக்களை வைத்திருப்பதற்குக் காரணம் என்ன?

அங்கே விமான தளமோ ராணுவ தளமோ ஏற்படுத்த வேண்டிய அவசியம் என்ன இருக்கிறது?

ஈரான் ருஷ்யாமேல் படையெடுக்கவா போகிறது? அல்லது பக்கத்திலிருக்கும் வேறு சிறு நாடுகள் அதன்மேல் படையெடுக்கும் என்பதற்கு இடம் இருக்கிறதா?

ஈரானோ அல்லது வேறு சிறு நாடுகளோ ருஷ்யா மேல் படையெடுக்கப் போவதில்லையென்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம்.

ஆனால், வேறொரு விஷயத்தை நாம் தெரிந்து கொள்ள வேண்டியது அவசியமாகும்.

ருஷ்யாவுக்கு அருகாமையிலுள்ள மத்திய கிழக்கு நாடுகளிலே ஐந்து லட்சம் பிரிட்டிஷ் துருப்புகள் இருக்கின்றன.

அது மாத்திரம் அல்ல. ஓர் அவசர ஆத்திரத்தில் அந்த நாடுகள் முழுவதையுமே தனக்குச் சாதகமான முறையில் பிரிட்டன் பயன்படுத்திக் கொள்ள முடியும் என்பதையும் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும்.

உலக நிலைமை இன்றிருப்பது போல நாளை இருக்கப் போவதில்லை.

இன்றில்லாவிட்டாலும் இன்னும் ஒரு ஐந்து வருஷமோ பத்து வருஷமோ கழித்தாவது மற்றொரு யுத்தம் உண்டாகலாம்.

அப்போது ருஷ்யாமீது படையெடுப்பும் நிகழலாம்.

அப்போது மத்திய கிழக்கு நாடுகளிலுள்ள பிரிட்டிஷ் துருப்புகள் ருஷ்யா மீது ஏவப்படலாம்.

ஏற்கெனவே வின்ஸ்டன் சர்ச்சில் ருஷ்யாமீது யுத்த கோஷம் செய்கிருக்கிறார்.

ருஷ்யா இதற்கெல்லாம் ஜாக்கிரதையாக இருக்க வேண்டியது அவசியம் அல்லவா?

அது தன்னைத் தற்காத்துக் கொள்ள வேண்டும் அல்லவா?

ஆகையால் அது ஈரானின் சுதந்திரத்தில் கை வைத்திருக்கிறது.

• • •

இதிலிருந்து ஈரானில் ருஷ்யத் துருப்புகள் இருப்பதற்கும் மத்திய கிழக்கில் பிரிட்டிஷ் துருப்புகள் இருப்பதற்கு முள்ள சம்பந்தம் நன்றாக விளங்கும்.

அத்துடன், நாம் ஏற்கெனவே குறிப்பிட்டதுபோல, ருஷ்யத் துருப்புகளை நாளையே ஈரானிலிருந்து வெளியேற்று வதற்குரிய எளிய, சுலபமான அதியாச்சரியமான வழியும் புலனாகும்.

ஈரானிலிருந்து ருஷ்யத் துருப்புகள் வெளியேற வேண்டுமானால், மத்திய கிழக்கு நாடுகளிலுள்ள ஐந்து லட்சம் பிரிட்டிஷ் துருப்புகள் முதலில் வாபசாக வேண்டும்.

அப்படியிருக்கும்போது, இந்தச் சுலபமான வழியை ஐக்கிய தேச மகா சபை ஏன் பின்பற்றவில்லை?

மத்திய கிழக்கிலுள்ள துருப்புகளை வாபஸ் செய்யும்படியாக பிரிட்டனை ஏன் கேட்கவில்லை?

ஈரானில் ருஷ்யத் துருப்புகள் இருப்பதால் உலக சமாதானத்துக்குப் பங்கம் விளையுமானால், மத்திய கிழக்கில் பிரிட்டிஷ் துருப்புகள் இருப்பது எந்த உலக நன்மைக்கு?

ஐக்கிய தேச மகா சபை ஏன் ஒரு கண்ணில் வெண்ணெயும் மற்றொரு கண்ணில் சுண்ணாம்பையும் வைத்துக் கொண்டு பார்க்க வேண்டும்?

இதற்கெல்லாம் ஒரு காரணம் — ஒரு மகா ரகசியம் இருக்கிறது.

யாராவது தங்கள் தலையில் தாங்களே மண்ணை வாரிப் போட்டுக் கொள்வார்களா?

ஐக்கிய தேச மகா சபை என்பது என்ன?

பிரிட்டனும் அமெரிக்காவும்தானே!

அவை தங்களைப்பற்றிய விஷயங்களைத் தாங்களே அம்பலத்துக்குக் கொண்டு வருமா?

ஆகவே, அவை ருஷ்யா செய்யும் அநியாயத்தை மாத்திரம் அம்பலத்துக்குக் கொண்டு வருகின்றன.

தாங்கள் செய்யும் அநியாயங்களையும் அக்கிரமங்களையும் மூடி வைக்கின்றன.

நல்லது, பேஷாக மூடி வைத்துக் கொள்ளட்டும்.

ஆனால், அப்படி மூடி வைக்கும் காரியத்தை ஐக்கிய தேச மகா சபைக்குப் பின்னால் மறைந்து செய்ய வேண்டாம்.

பகிரங்கமாக எல்லோருக்கும் தெரியும்படியாகச் செய்யட்டும்.

ஐக்கிய தேச மகா சபை என்ற பெயரை பிரிட்டிஷ் — அமெரிக்க மகா சபை என்று மாற்றி வைத்துக் கொள்ளட்டும்!

# சிற்ப வேலைப்பாடுள்ள ஜன்னல் போல் நேர்த்தியானது






கட்டாவ் மக்கன்ஜி ஸ்பின்னிங் & வீவிங் கம்பெனி லி.

மில்ஸ்: பைகுல்லா, பம்பாய்.

ஆபீஸ்: லக்ஷ்மி பில்டிங், பல்லார்ட்பியர், போர்ட், பம்பாய்.

# புது டில்லி நாடகம்

சாவி

[புது டில்லியிலே மூன்று மந்திரிகள் தூதுகோஷ்டி வந்திருப்பதை முன்னிட்டு நிர்வாக சபை அங்கத்தினர்களாகிய சநாதனிகள் ஒன்று கூடி ரகசியக் கூட்டம் நடத்துகிறார்கள்.]

**கூட்டத்தின் தலைவர் :**—நமக்கெல்லாம் இப்போது ஒரு பெரிய நெருக்கடி ஏற்பட்டிருக்கிறது. இத்தனை காலமாய் நாம் எல்லோரும் ஆனந்தமாய்க் குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருந்த நிர்வாக சபைக் கோவிலுக்குள் பொதுஜனத் தலைவர்களாகிய ஹரிஜனங்களை விட்டு ஆலயத்தைக் குட்டிச் சுவராக்கப் போகிறார்களாம். இதற்காக பிரிட்டிஷ் மந்திரி சபையிலிருந்து மூன்று மந்திரிகளடங்கிய தூதுகோஷ்டி ஒன்று வந்திருக்கிறது. இந்த கோஷ்டி தேசத் தலைவர்களிடம் பேச்சு வார்த்தை நடத்தி எப்படியாவது ஆலயத்தின் நிர்வாகத்தை அவர்கள் கைக்கு மாற்றிவிடுவது என்று வந்திருக்கிறது. ஆகையால் நாம் அனைவரும் இதை ஒருமுகமாக எதிர்த்து இந்தப் பொதுஜனத் தலைவர்களடங்கிய ஹரிஜனக் கூட்டத்தை ஆலயத்துக்குள் பிரவேசிக்க முடியாதபடி செய்ய வேண்டும்.

**கூட்டத்தில் ஒரு சநாதனி :**— ஆமாம்; ஆமாம்; மூன்று மந்திரிகளென்ன? மும்மூர்த்திகளே வந்தபோதும் இதை நாம் எதிர்த்தே தீரவேண்டும்.

**இன்னொரு சநாதனி :**—இதற்கு முன்புகூட இந்தக் கோயிலுக்கு இம்மாதிரியான பேராபத்துக்கள் இரண்டு தடவை ஏற்பட்டிருக்கின்றன. ஸர் ஸ்டாபோர்ட் கிரிப்ஸ் தூது வந்த போதும், வைஸ்ராய் வேவல் திட்டம் ஸிம்லாவில் வைத்து அலசப்பட்டபோதும் சநாதனிகளாகிய நம் பாடு திரிசங்கு ஸ்வர்க்கமாயிருந்தது. நல்ல வேளையாக. இரண்டு தெய்வங்கள் முன் வந்து நம்மைக் காப்பாற்றித் தஞ்சமளித்தன.

**கூட்டத்தில் ஒரு குரல் :**—அப்படியா? அந்த தெய்வங்கள் என்னென்ன?

**சநாதனி :**—அவையா? ஒன்று முஸ்லிம் லீக் முட்டுக்கட்டை தெய்வம். மற்றொன்று விசேஷாதிகார தெய்வம். கிரிப்ஸ் தூது வந்தபோது இந்த விசேஷாதிகார தெய்வமும், ஸிம்லா மகாநாடு கூடியபோது முஸ்லிம் லீக் தெய்வமும் குறுக்கிட்டு நம்மைக் காப்பாற்றின.

["வாழ்க முஸ்லிம் லீக், வாழ்க விசேஷாதிகாரம்" என்று கோஷிக்கிறார்கள்!]

**மற்றொரு சநாதனி :**—ஏன் இந்தத் தடவையும் நாம் அந்தத் தெய்வங்களின் உதவியை......

**இன்னொரு சநாதனி :**—நடக்காத காரியம். இந்தத் தடவை எந்தக் குட்டித் தெய்வங்களின் பாச்சாவும் பலிக்காது போலிருக்கிறது. ஏனென்றால் "மைனாரிடிக் கட்சி மெஜாரிடிக் கட்சியை அமுக்கப் பார்ப்பதற்கு இடம் கொடோம்" என்று லண்டனிலுள்ள தர்மகர்த்தா ஆட்லி துரையே வாக்குத் தத்தம் செய்து விட்டார். அதிகாரவர்க்கப் பூசாரிகளின் ஜம்பமும் சாயாது போலிருக்கிறது. ஏனெனில் மேலே உள்ள தெய்வங்களே ஆலயத்தை ஹரிஜனங்களிடம் ஒப்படைக்க வந்திருக்கும் போது விசேஷாதிகாரம் செல்லாதல்லவா?

**வேறொரு சநாதனி :**— ஐயையோ, இவ்வளவு புத்திசாலிகள் நிறைந்த இந்த சபையில் யாருக்கும் ஒருவித யோசனையும் தோன்றவில்லையா?

**ஒரு குரல் :**—எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது

**பல குரல்கள் :**—என்ன? என்ன?

**ஒரு குரல் :**—நாம் எல்லோரும் உண்ணாவிரதம் இருந்து சத்தியாக்கிரகம் செய்தால் நிச்சயம் பலன் ஏற்படும்.

**அசரீரிவாக்கு :**—ஓ! பேஷாய் ஏற்படும். அதனால் ஒரு பலன் நிச்சயம் ஏற்பட்டே தீரும்.

["அது என்ன பலன்?" என்று எல்லோரும் ஆவலுடன் ஆகாயத்தில் குரல் வந்த திக்கை உற்று நோக்குகிறார்கள்.]

**அசரீரிவாக்கு :**—நீங்கள் எல்லாரும் உண்ணாவிரதம் தொடங்கினால் இப்போது நாட்டிலுள்ள உணவுப் பஞ்சமாவது ஓரளவு நிச்சயம் குறையும். பொது மக்களும் உங்களை வாழ்த்துவார்கள்.

[சபையிலுள்ள சநாதனிகள் அனைவரும் ஒருவரை யொருவர் பார்த்து பேந்தப் பேந்த விழிக்கிறார்கள்!]

# கம்பர் தரும் காட்சி

டி.கே.சி.


சந்திரா

## 136. பேயாடக் கொடியாட!

சூர்ப்பனகையின் மானபங்கமே கரனுக்கு ஏழேழு ஜன்மத்துக்கும் போதும். அதோடு பதினாலு அரக்க வீரர்களும் ராமனால் பட்டொழிந்தார்கள் என்று கேட்டால் எப்படி இருக்கும்!

"கூப்பிடு, போர்ப் படையை!" என்று கத்தினான்.

பக்கத்தில் நின்ற ஏவலாளர் என்ன செய்தார்கள்? பார்க்கலாம்.

'அழை' என் றேவ
　　அரக்கவன் போர்ப்படை,—
உழையர் ஓடி
　　ஒருநொடி, ஓங்கல்மேல்
மழையென் மாமுர(சு)
　　ஏற்றினர்: வல்லையின்
முழையின் வாள்அரி
　　அஞ்ச முழக்குவார்

[அழை அரக்கவன் போர்ப்படை என்று ஏவ: அரக்கரான வலிய போர்ப் படையை எல்லாம் 'கூப்பிடு' 'திரட்டு' என்று கட்டளையிடவும்: உழையர் ஓடி ஒரு நொடி: ஏவலாளர் ஓடிப் போய் ஒரு நொடியில்தானே: ஓங்கல் மேல் மழை யென் மாமுரசு ஏற்றினர்: ஒரு மலைச் சிகரத்தின் மேல் மேகந்தானோ என்று சொல்லும்படியான ஒரு பெரிய முரசைத் தூக்கி வைத்தார்கள்: வல்லையின்: வெகு துரிதமாகவே: முழையின் வாள் அரி அஞ்ச: அங்குள்ள மலைக் குகைகளில் சிங்கங்களே அஞ்சும்படியாக: முழக்குவார்: முரசை அடிக்க ஆரம்பித்தார்கள்.]

மலைச் சிகரத்தில் முரசை வைத்தார்கள். அதை அடித்துப் பேரொலி உண்டாக்கினார்கள். அவ்வளவுதான்! பெரிய பெரிய மேகங்கள் திரண்டு வந்ததுபோல் ஒரு தோற்றம் உண்டாயிற்று.

பேரி யோசை
　　பிறந்தலும், பெட்புறு
மாரி மேகம்
　　வரம்பில வந்தெனத்,
தேரின் சேனை
　　திரண்டன, — தேவர்தம்
ஊரும் நாகர்
　　உலகும் உலையவே!

[பேரி: முரசு: பெட்புறு மாரி மேகம் வரம்பு இல வந்தென: பெரிய உருவத்தன வாய மழை மேகம் அனேகம் வந்ததுபோல: தேவர்தம் ஊரும் நாகர் உலகும் உலையவே: எட்டியுள்ள தேவலோகம் என்ன நாகலோகம் என்ன, எல்லாம் அஞ்சி நடுங்கும்படியாக— திரண்டன.]

உலகம் முடிகிற காலத்தில் பெரும் புயல் அடித்துக் கடல் ஒரே பொங்காய்ப் பொங்கி வருமாம். அதன் பேரொலி வான் முகட்டைத் தாக்குமாம். அலைகளோ பெரிய பெரிய மலைத் தொடர்கள் போலப் புரண்டு வருமாம்.

இதையெல்லாம் நினைவில் வைத்துக் கொண்டு அரக்கர் சேனையின் பேர் ஆரவாரத்தைக் கேட்க வேண்டும். தொடர்ந்து ஒட்டி நிற்கும் தோள்களையும் பார்க்க வேண்டும்.

போர்ப்பெ ருப்படை,—
　　பொம்மல் முழக்கமா,
நீர்த்த ரங்கம்
　　நெடுந்தடந் தோள்களா
ஆர்த்தெ ழுந்த(து):—
　　இறுதியின் ஆர்கலி
கார்க்க ருங்கடல்
　　கால்கிளர்ந் தென்னவே

[போர்ப் பெரும் படை. (ஆர்த்தெழுந்தது) போர் செய்ய வந்த அரக்கர் சேனையானது: பொம்மல் முழக்கமா: ஊழிக்காலத்தில் பொங்கும் கடலின் கோஷமானது சேனையின் போர் முழக்கமாகவும்; நீர்த்தரங்கம் நெடுந் தடந்தோள்களா: கடலின் அலைகளானவை அரக்கர்களது தோள்களாகத் தோன்றும்படி: (போர்ப் பெரும் படை) ஆர்த்தெழுந்தது: பேராரவாரத்தோடு எழுந்தது: இறுதியின் ஆர்கலிக் கார்க் கருங்கடல்: யுகாந்த காலத்தின் பேரொலியோடு கன்னங் கரேல் என்று பொங்கி வரும் கடல்: கால் கிளர்ந்து என்னவே: ஊழிக் காற்றால்ப் பொங்கி வந்தது போல.]

போர்ப் பெரும்படை எழுந்த காரியமே ஓரே பயங்கரம். நடந்து வந்தது எப்படி இருந்தது. பெரிய பெரிய கொடிகளை வீசிக்கொண்டு வந்தன. அதைப் பார்த்த எதிரியின் மனம் எப்படியிருக்கும்!

காடு துன்றி
விசும்பு கரந்தென

நீடி எங்கும்
நிமிர்ந்தநெடுங்கொடி ;—

ஓடும் எங்கள்
பகிஎன்(று) உவந்தெழுந்(து)

ஆடு கின்ற
அலகையின், ஆடவே

[காடு துன்றி விசும்பு கரந்தென: காட்டை அடைத்துக் கொண்டு ஆகாயத்தையும் மறைத்தது என்று சொல்லும்படி: நீடி எங்கும்: நாலா பக்கமும் பரவியதாய்: நிமிர்ந்த நெடுங்கொடி: உயரமாக நிமிர்ந்து நின்ற பெரிய பெரிய கொடிகள்: ஓடும் எங்கள் பகி என்று உவந்து எழுந்து ஆடுகின்ற அலகையின்: யுத்தம் வந்து விட்டது. பகி நம்மை விட்டு ஓடிப் போய் விடும், தின்னுவதற்கு வேண்டிய மட்டும் பிணம் கிடைக்கும் என்று ஆடுகின்ற பேய்களைப் போல்: ஆடவே: அந்தக் கொடிகளும் காற்றில் கூத்தாடவே.]

அரக்கர் சேனை வருகிறது என்று சொல்லக் கேட்டாலே எதிரிகளது நெஞ்சம் படபட என்று அடிக்கும். அவர்கள் ஏந்தி வரும் கொடிகளின் ஆட்டத்தைக் கண்ணுலப் பார்த்து விட்டால் பயம் எப்படியிருக்கும்! கொடிகளின் ஆட்டத்தோடு பேய்களின் கூத்தாட்டமும் சேர்ந்து கொள்ளுகிறது. அப்படியானுல் எதிரிகளின் இதயத் துடிப்பு எப்படி இருக்கும்!




ரேடியோ நிகழ்ச்சிகளைப் பற்றிய பல மாறுதல்களில் ஏப்ரல் 1வ. முதல் சில பெரிய கச்சேரிகளுக்கு ஒன்றரை மணி நேரம் அவகாசம் கொடுத்திருப்பது ஒன்றாகும். அந்த நீண்ட நேரம், முதல் முதலாக, திருச்சியில் காரைக்குடி சாம்பசிவய்யரின் வீணைக்குக் கொடுத்தது மிகப் பொருத்தமாயிருந்தது. நாதப் பொழிவுடனும், கமகச் செழிப்புடனும் அவ்வாத்யத்தை நிகரற்ற முறையில் கையாளும் பழம் பெரும் வித்வான் என்பது அன்றைய வாசிப்பிலும் தெரிந்தது. எவ்வளவு நேரம் கேட்டாலும் திகட்டாதது. எடுத்துக் கொண்ட நான்கு ராகங்களில், கல்யாணியும், தோடியும் ரொம்ப விஸ்தாரமாயிருந்தன. ஒரு விதத்தில் பாவப் பொழிவுடன் அபூர்வ அழகு வடிவமாய் இழைந்து வந்த கேதார கௌளைக்கே முதல் ஸ்தானம் கொடுக்க வேண்டும். மொத்தத்தில் ராகங்களைவிட அவைகளுக்கு வாசித்த தானங்களே மிகச் சிறப்பாயிருந்தன.

மார்ச் 26வ. சென்னையில் கனக்காடு ராம நாராயணய்யரின் ராகம், தானம், பல்லவிக் கச்சேரி எதிர்பார்த்தபடி முதல்தரமாயிருந்தது. ரஞ்சகமான சாரீரத்துடன், ஞானச்சிறப்பும், நிதானமும் கொண்டு, தோடியை அழகு பிடிகளுடன் ஆலாபனை செய்து, தானத்தை விசேஷமாய் வழங்கி, 'கானலோல கருணாலவால' என்ற பல்லவியை ராகபாவம் ததும்பப் பாடினார். அன்று அவருக்கு அமைந்த பக்க வாத்யங்களும் தேர்ந்தியாயிருந்தன.

29வ. திருச்சியில் நாதஸ்வரக் கச்சேரி செய்த திருவீழிமிழலை சுப்பிரமண்யம் சகோதரர்கள் கலையுலகில் பிரபல்ய மடைந்தவர்கள். தோடியும் பல்லவி ராகமாம் காம்போதியும் பல்லவி ராகமாலிகையும் சிறப்பாயிருந்தன. உருப்படிகளின் கச்சிதமே அவர்களிடம் கவனிக்கத் தக்கது.

30வ. சென்னையில் குன்னக்குடி வெங்கட ராமய்யர், நயமாய் இழையும் சாரீரத்தில், சிறந்த வேலைப்பாடுகளுடன் ஒன்றேகால் மணி நேரம் சக்கைப் போடு போட்டார். எல்லா உருப்படிகளுக்கும் ராகங்கள் பாடி ஸ்வரப்ரஸ்தாரமும் செய்தார். தற்கால சங்கீத முறைகளில், அவருடைய முறை குறிப்பிடத்தக்க அதிக நவீனம் கலந்தது என்பது எளிதில் தெரிந்திருக்கும். பைரவியில் கற்பனையை வாரி யள்ளினார். கன்னட ராகம் வளப்பமாயிருந்தது. அதன் உருப்படி 'ஸ்ரீமாத்ருபூத'மும் அப்படியே. ஆறு ராகங்களாலான இறுதி ராகமாலிகையும் சுகமாயிருந்தது.

எதிர்பார்த்ததற்கு மேல் வியக்கத்தக்க உயர்ந்த ராகமாய் அமைந்த ஒரு கச்சேரியைக் குறிப்பிடாமலிருக்க முடியாது. இது தான், 31வ. சென்னையிலிருந்து பாடிய சேலம் டி. செல்லமய்யங்காரது. கிடைத்தது குறுகிய அரை மணி நேரமேயாயினும், அதற்குள், தம் ஞானச் சிறப்பையும், சாதக பலத்தையும் நல் வழியையும், கவனத்தைக் கவரும் முறையில் காட்டினார். கனிப்பும் ரஞ்சகமும் கொண்ட சாரீரத்தின் அசாத்திய உதவிபடியுடன், சுத்த பங்காளாவையும், கேதார கௌளையும் பாவப் பொழிவுடன் உருக்கமாய்ப் பாடினார். உருப்படிகளும் ஸ்வரப்ரஸ்தாரங்களும் விறுவிறுப்பாயிருந்தன. பெயர் பெற்ற ஸீனியர் வித்வான் சேலம் துரைசாமி அய்யங்காரின் குமாரர் என்றால் கேட்க வேண்டுமா?

• • •

மார்ச் 26வ. சென்னையில் வைக்கம் சரஸ்வதி, திருச்சியில் கல்லிடைக்குறிச்சி என். பாலசுப்ரமணிய பாகவதர் இவர்களின் கானங்கள் கவனத்தை யிழுத்தன. முன்னவர் கனிப்பும், இனிப்பும் கலந்த குரலில் நாட்டக் குறிஞ்சி, கரஹரப்ரியா ராகங்களைத் திறம்படக் கையாண்டார். பின்னவர் சற்று விரிந்த நய சாரீரத்தில் அடாணா, நாட்டக்குறிஞ்சி, ஹரி காம்போதி முதலிய ராகங்களைக் கச்சிதமாய் வழங்கியதோடு, சலநாட்டையையும் 'ஸ்வாமி நாத' என்ற அதன் கிருதியையும், தெளிவான ஷட் சுருதி ரிஷபதைவதப் பிடிப்புகளுடன் நற் சொரூபங்களுடன் பாடியது போற்றத்தக்கது.

27வ. சென்னையில் ராஜம் வைத்யநாதன் ஜீவன் நிறைந்த கனிப்பான குரலில், கற்பனையுடனும், நாஸூக்காவும், பந்துவராளி, கரஹரப்ரியா ராகங்களையும் உருப்படிகளையும் தேர்ந்தியாய் வழங்கினார்.


டி. செல்லமய்யங்கார்

29வ. சென்னையில் வைதேகி விஜயராகவன் இனிய குரலில் தன்யாசி, ஜோன்புரி ராகங்களை, வைதீகமாயும் தாராளமாயும் விட்டுப் பாடியது கவனத்தைக் கவர்ந்தது.

31வ. சென்னையில் சரஸ்வதி பசுராமன் மதுரமான குரலுடன் சுகவழியாய் பைரவி, மோஹனம் ராகங்களையும் உருப்படிகளையும் மனோகரமாய்ப் பாடினார்.

# வாதாபி படையெடுப்பு




தக்ஷிண பாரத தேசத்தின் சரித்திரத்தில் பல்லவ சக்கரவர்த்தி மாமல்ல நரசிம்மரின் வாதாபி படையெடுப்பு பிரசித்தி பெற்றது. கி. பி. 642-ம் ஆண்டில் பல்லவ சைன்யம் சளுக்க சாம்ராஜ்யத்தின் தலைநகரான வாதாபியைக் கைப்பற்றி அதைத் தீயிட்டு அழித்ததாகச் சரித்திரம் கூறுகின்றது. அந்தக் காலத்துச் சரித்திரத்தில் பிரசித்தி யடைந்த தென்னாட்டு ஸ்தலங்கள் சிலவற்றை மேலேயுள்ள படத்தில் காணலாம்.

# சிவகாமியின் சபதம்

## அத்தியாயம் 32

## விழாவும் விபரீதமும்

**எ**த்தனையோ நூற்றாண்டு காலமாக நெடிது வளர்ந்து நீண்டு படர்ந்து ஓங்கித் தழைத்திருக்கும் ஆல விருக்ஷத்தின் காட்சி அற்புதமானது. அத்தகைய ஆலமரத்தின் விழுதுகள் தரையில் ஊன்றி வேர் விட்டதன் காரணமாகத் தாய் மரத்தைச் சேர்ந்தாற்போல் இளை மரங்கள் தோன்றித் தனித்த மரங்களைப் போலவே காட்சி தருவதும் உண்டு. ஸநாதன ஹிந்து மதமாகிய ஆலமரத்திலிருந்து அவ்விதம் விழுது இறங்கி வேர் விட்டுத் தனி மரங்களாகி நிற்கும் சமயங்கள் பௌத்தமும் சமணமும் ஆகும். அவ்விரு சமயங்களும் பழைய காலத்தில் பாரத நாட்டில் கலைச் செல்வம் பெருகியதற்குப் பெரிதும் காரணமாயிருந்தன.

* * *

**அ**ஜந்தா மலைப் பிராந்தியத்துக்குள்ளே, மனிதர்கள் எளிதில் எட்ட முடியாத அந்தரங்கமான இடத்தில், மலையைப் பிளந்து கொண்டு பாதி மதியின் வடிவமாகப் பாய்ந்து சென்ற நதிக்கரையிலே, இன்றைக்கு இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன்னால் புத்த பிக்ஷுக்கள் கருங்கற் பாறைகளைக் குடைந்து புத்த சைத்தியங்களையும் விஹாரங்களையும் அமைக்கத் தொடங்கினார்கள். அது முதல் இரண்டாவது புலிகேசி சக்கரவர்த்தியின் காலம் வரையில், அதாவது ஏறக்குறைய அறுநூறு ஆண்டு காலம் அந்த அந்தரங்கப் பிரதேசத்தில் அற்புதமான சிற்ப சித்திரக் கலைகள் வளர்ந்து வந்தன. அழியாத கல்லில் அமைத்த சிலை வடிவங்களும், அமர வர்ணங்களில் தீட்டிய ஓவிய உருவங்களும் பெருகி வந்தன. பார்ப்போரின் கண்களின் மூலம் இருதயத்துக்குள்ளே பிரவேசித்து அளவளாவிப் பேசிக் குலாவும் தேவர்களும் தேவியர்களும் வீரர்களும் வீராங்கனைகளும் சௌந்தரிய புருஷர்களும் அழகே உருவான நாரீமணிகளும் சைத்திரிக பிரம்மாக்களால் சிருஷ்டிக்கப்பட்டு வந்தார்கள்.

அவ்வாறு அஜந்தாவிலே புதிய கலை சிருஷ்டி ஆரம்பிக்கப்பட்ட நாளிலிருந்து அந்தப் பிரதேசம் கண்டிராத கோலாகலத் திருவிழாவானது புலிகேசி சக்கரவர்த்தியின் ஆட்சி தொடங்கிய முப்பத்தாறாவது வருஷத்தில் அங்கு மிகச் சிறப்பாக நடைபெற்றது. அதுவே அந்தச் சளுக்கப் பேரரசன் ஆட்சியின் கடைசி ஆண்டுமாகும்.

அந்த ஆண்டு வரையில் அஜந்தா குகைப் பிரதேசத்துக்குள் அயலார் யாரும் பிரவேசிக்க அனுமதிக்கப்பட்டதில்லை. புத்த பிக்ஷுக்களும் அவர்களுடைய சிஷ்யக் கூட்டங்களும்தான் அங்கே நிரந்தரமாக வாழ்ந்து வந்தவர்கள். குரு சிஷ்ய பரம்பரையில் அவர்கள் சிற்ப சித்திரக் கலைகளைப் பயின்றிருந்தார்கள். அவர்களே அஜந்தாவில் பெரும்பாலான வேலைகளையும் செய்தார்கள். சில சமயம் வெளியிலிருந்து விசேஷ சக்தி வாய்ந்த சிற்பிகளும் சித்திரக்காரர்களும் தருவிக்கப்படுவதுண்டு. அவர்கள் கண்ணைக் கட்டி உள்ளே அழைத்து வரப்படுவார்கள். வேலை முடிந்ததும் அவ்விதமே கண்ணைக் கட்டி வெளியே அழைத்துச் செல்லப்படுவார்கள்.

இத்தகைய ஜாக்கிரதை யெல்லாம் இரண்டு முக்கிய நோக்கங்களை முன்

னிட்டுப் பல நூறு வருஷ காலம் அனுஷ்டிக்கப்பட்டு வந்தன. முதல் நோக்கம், அஜந்தா சித்திரங்களின் அழியா வர்ண இரகசியத்தைப் பிறர் அறியாமல் காப்பாற்ற வேண்டும் என்பது. இரண்டாவது நோக்கம், அந்தப் பிரதேசங்களில் அக்காலத்தில் அடிக்கடி ஏற்பட்டு வந்த இராஜாங்க மாறுதல்களினால் அஜந்தா பௌத்த சங்கிராமத்துக்குக் கெடுதல் ஒன்றும் நேராமலிருக்க வேண்டும் என்பது.

பழைய பாரத நாட்டில் இராஜாங்கங்களும் இராஜ வம்சங்களும் மாறியபோது சமயங்களுடைய செல்வாக்கு மாறுவது சர்வ சாதாரணமாயிருந்தது. இந்த நாளில் போலவே அந்தக் காலத்திலும் விசால நோக்கமின்றிக் குறுகிய சமயப் பற்றும் துவேஷ புத்தியுங் கொண்ட மக்கள் இருக்கவே செய்தார்கள். சமரச புத்தியுடன் சகல மதங்களையும் ஒருங்கு நோக்கிக் கலைகளை வளர்த்து நாட்டிற்கே மேன்மையளித்த புரவலர்களும் அவ்வப்போது தோன்றினார்கள்.

நம்முடைய கதை நடந்த காலத்தில் வடக்கே ஹர்ஷவர்த்தனரும், தெற்கே மகேந்திர பல்லவர், மாமல்லர் ஆகியவர்களும் அத்தகைய சமரச நோக்கங் கொண்ட பேரரசர் திலகங்களாய் விளங்கினார்கள்.

வாதாபி புலிகேசி சக்கரவர்த்தியும் காஞ்சி படையெடுப்பிலிருந்து திரும்பிய பிறகு அத்தகைய பெருந்தகையாரில் ஒருவரானார். அஜந்தா புத்த சங்கிராமத்துக்கு அவர் அளவில்லாத கொடைகளை அளித்துக் கலை வளர்ச்சியில் ஊக்கம் காட்டி வந்தார். இது காரணமாக, அஜந்தாவின் புத்த பிக்ஷுக்கள் அறுநூறு வருஷமாக அங்கு நடவாத காரியத்தைச் செய்யத் தீர்மானித்தார்கள். அதாவது புலிகேசி சக்கரவர்த்தியை அஜந்தாவுக்கு அழைத்து உபசரிக்கவும் அது சமயம் சிறப்பாகக் கலை விழாக் கொண்டாடவும் ஏற்பாடு செய்தார்கள்.

சக்கரவர்த்தியும் அவருடைய பரிவாரங்களும் வந்து சேர்வதற்காகக் காடு மலைகளைச் செப்பனிட்டு இராஜ பாட்டை போடப்பட்டது. அந்தப் பாதை வழியாக யானைகளிலும் குதிரைகளிலும் சிவிகைகளிலும் ஏறிச் சக்கரவர்த்தியும் அவருடைய பரிவாரங்களும் மந்திரி தந்திரிகளும் சேனாபதிகளும் மற்றும் சளுக்க சாம்ராஜ்யத்தின் பிரசித்த கவிகளும் கலை நிபுணர்களும் அயல் நாடுகளிலிருந்து வந்திருந்த விசேஷ விருந்தாளிகளும் மேற்படி விழாவுக்கு வந்து சேர்ந்தார்கள்.

அவர்களனைவரும் அஜந்தா புத்த பிக்ஷுக்களால் இராஜோபசார மரியாதைகளுடன் வரவேற்கப்பட்டார்கள். வந்த விருந்தாளிகள் கும்பல் கும்பலாகப் பிரிந்து ஒவ்வொரு சைத்யத்துக்கும், விஹாரத்துக்கும் சென்று ஆங்காங்கு அமைக்கப்பட்டிருந்த சிற்பங்களையும் சித்திரங்களையும் பார்த்துக் களித்துக் கொண்டு வந்தார்கள்.

நல்ல வெய்யில் எரித்த உச்சி வேளையிலேதான் விஹாரங்களின் உட் சுவர்களில் தீட்டியிருந்த உயிரோவியங்களைப் பார்ப்பது சாத்தியமாகையால் விருந்தாளிகள் அனைவரும் அன்றிரவு அங்கேயே தங்கியிருந்து மறுநாளும் சித்திரக் காட்சிகளைப் பார்த்துவிட்டுப் போவது என்று ஏற்பாடாகியிருந்தது.

சக்கரவர்த்தியின் அன்றைய முக்கிய அலுவல்கள் எல்லாம் முடிந்த பிறகு பிற்பகலில் சிரம பரிகாரமும் செய்து கொண்டாயிற்று.

**மா**லைப் பொழுது வந்தது. மேற்கே உயரமான மலைச் சிகரங்களுக்குப் பின்னால் சூரியன் மறைந்து கீழே கீழே போய்க் கொண்டிருந்தது. அம் மலைச் சிகரங்களின் நிழல்கள் நேரமாக ஆகக் கிழக்கு நோக்கி நீண்டு கொண்டே வந்தன. கிழக்கே யிருந்த சில உயர்ந்த சிகரங்களில் படிந்த மாலைச் சூரியனின் பொற் கிரணங்கள் மேற் சொன்ன கரிய நிழல் பூதங்

களால் தூரத்தப்பட்டு அதிவேகமாகக் கீழ்த் திசை நோக்கிப் பிரயாணம் செய்து கொண்டிருந்தன.

மலையை அர்த்த சந்திர வடிவமாகப் பிளந்து கொண்டு சென்ற வாகோரா நதியின் வெள்ளமானது ஆடிக்கொண்டும் பாடிக் கொண்டும் ஆங்காங்கு துள்ளி விளையாடிக் கொண்டும் அந்த விளையாட்டிலே விழுந்து எழுந்து இரைந்து கொண்டும் அதி விரைவாகச் சென்று கொண்டிருந்தது.

சரிவான பாறைச் சுவர்களிலே கண்ணுக் கெட்டிய தூரம் பாரிஜாத மரங்கள் இலையும் பூவும் மொட்டுக்களுமாய்க் குலுங்கிக் கொண்டிருந்தன. அவற்றின் இடை இடையே சரக்கொன்னை மரங்கள் கண்ணைப் பறித்த பொன்னிறப் பூங்கொத்துக் களைச் சரம் சரமாகத் தொங்க விட்டுக் கொண்டு பரந்து நின்றன.

நதி ஓரத்துப் பாறை ஒன்றில் இரண்டு கம்பீர ஆகிருதியுள்ள புருஷர்கள் அமர்ந்து சம்பாஷித்துக் கொண்டிருந்தார்கள்.

சற்று நெருங்கிப் பார்த்தோமானால் அவர்கள் புலிகேசி சக்கரவர்த்தியும் நாகநந்தி பிக்ஷுவும்தான் என்பதைத் தெரிந்து கொள்வோம்.

* * *

முப்பத்தைந்து வருஷங்களுக்கு முன்பு·எந்த வாகோரா நதிக் கரையின் பாறைமேல் உட்கார்ந்து அண்ணனும் தம்பியும் தங்கள் வருங்காலப் பகற் கனவுகளைப் பற்றிச் சம்பாஷித்தார்களோ, வாதாபி சிம்மாசனத்தைக் கைப்பற்றிச் சளுக்க சாம்ராஜ்யத்தை மகோந்நத நிலைக்குக் கொண்டு வருவது பற்றிப் பற்பல திட்டங்களைப் போட்டார்களோ, அதே பாறையில் இன்று அவர்கள் உட்கார்ந்து சம்பாஷித்துக் கொண்டிருந்தார்கள்.

ஆனால் அன்றைக்கும் இன்றைக்கும் அவர்களுடைய தோற்றத்திலும், சம்பாஷணையின் போக்கிலும் ரொம்பவும் வித்தியாசம் இருந்தது. பிராயத்தின் முதிர்ச்சியோடு கூட அவர்களுடைய வெளி உலக அநுபவங்களும் அக உலக அநுபவங்களும் அவர்கள் ஈடுபட்ட கோரமான யுத்தங்களும் யுத்தத்தை விட மகா பயங்கரமான இருதயப் போராட்டங்களும் ஆசாபாசங்களும் கோபதாபங்களும் சேர்ந்து, முப்பத்தைந்து வருஷங்களுக்கு முன்னால் அதே நதியில் பிரதிபலித்த பால் வடியும் இளம் முகங்களைக் கோடுகளும் சுருக்கங்களும் விழுந்த கொடூர முகங்களாகச் செய்திருந்தன.

முக்கியமாக, நாகநந்தி பிக்ஷுவின் திரு முகத்தை அப்போது பார்க்க முடியவில்லை. அப்படி அவர் முகத்தில் கோபம் கொதித்துக் கொண்டிருந்தது. இரத்தம் கசிவதுபோல் சிவந்திருந்த கண்களில் அடிக்கடி கோபாக்னியின் ஜுவாலை மின்னலைப்போல் பிரகாசித்தது.

அவர் கூறிய வார்த்தை ஒவ்வொன்றும் நெருப்பைக் கக்கிக்கொண்டு பாயும் அக்கினியாஸ்திரத்தைப் போல் புறப்பட்டுச் சீறிக்கொண்டு பாய்ந்தன.

"ஆ! தம்பி! என்னுடைய விருப்பம் என்னவென்று கேட்கிறாய்? சொல்லட்டுமா? இந்தக் கணத்தில் பயங்கர பூகம்பம் ஏற்பட்டு இந்த அஜந்தா மலையானது அப்படியே அதல பாதாளத்தில் அமிழ்ந்து விட வேண்டுமென்பது என் விருப்பம். ஆயிரம் இடிகள் சேர்ந்தாற் போல் விழுந்து இங்குள்ள சைத்யங்களையும் விஹாரங்களையும், இங்கே வசிக்கும் பிக்ஷுக்களையும், உன்னையும் உன் பரிவாரங்களையும் என்னையும் அடியோடு அழித்து நாசமாக்க வேண்டுமென்பது என் விருப்பம்!" என்றார் நாகநந்தி.

இதைக் கேட்ட புலிகேசி, சாவதானமாக, "அடிகளே! அஜந்தாவுக்கு வந்தது உண்மையிலேயே பலன் தந்து விட்டது. எனக்குச் சொல்ல முடியாத சந்தோஷமாயிருக்கிறது. கொஞ்ச காலமாகத் தாங்கள் ரொம்பவும் பரம சாதுவாக மாறிக்கொண்டு வந்தீர்கள். இன்றுதான் பழைய நாகநந்தி பிக்ஷுவாகக் காட்சி அளிக்கிறீர்கள்!" என்றான்.

"ஆம், தம்பி, ஆம்! இன்று நான் பழைய நாகநந்தி ஆகியிருக்கிறேன். அதன் பலனை நீயே அநுபவிக்கப்போகிறாய்! ஜாக்கிரதை!" என்று பிக்ஷு நாக சர்ப்பத்தைப் போல் சீறினார்.

"அண்ணா! என்னை என்ன செய்வதாக உத்தேசித்திருக்கிறாய்?" என்று புலிகேசி கேட்டான்.

"இன்று இராத்திரி நீ தூங்கும்போது இந்த விஷக் கத்தியை உன் மார்பிலே பாய்ச்சி உன்னைக் கொன்று விடப் போகிறேன்......"

புலிகேசி "ஹாஹாஹா" என்று சிரித்தான். பிறகு, "அப்புறம் என்ன செய்வீர்கள்? அதாவது என் பிரேதத்தை என்ன செய்வதாக உத்தேசம்?" என்று பரிகாசக் குரலில் வினவினான்.

"இந்த வாதோரா நதியில் கொண்டு வந்து போட்டு விடுவேன்."

"அப்புறம்? கேட்கிறவர்களுக்கு என்ன சொல்வீர்கள்?"

"ஒருவரும் கேட்க மாட்டார்கள்!"

"ஏன் கேட்கமாட்டார்கள்? அஜந்தாவுக்கு வந்த சக்கரவர்த்தி இரவுக்கிரவே எப்படி மறைந்தார் என்று சளுக்க ராஜ்யத்தின் பிரஜைகள் கேட்க மாட்டார்களா?"



"கேட்க மாட்டார்கள்! சக்கரவர்த்தி மறைந்தது அவர்களுக்குத் தெரிந்தால் அல்லவா கேட்பார்கள்? ஒருவருக்கும் தெரியப் போவதில்லை."

"அது எப்படி?"

"ஒரு சமயம் நான் உன்னைப் போல் வேஷம் தரித்து அடிபட்டுச் சித்திரவதைக்குள்ளாகி உன் உயிரைக் காப்பாற்றினேன். இன்னொரு சமயம் நான் உன்னைப் போல் வேஷம் தரித்துப் போர்க்களத்தில் நின்று மகேந்திரனோடு போராடி அவன்மீது விஷக் கத்தியை எறிந்து கொன்றேன். அதே உருவப் பொருத்தம் இப்போதும் எனக்குத் துணை செய்யும். நீ மறைந்ததையே ஜனங்கள் அறிய மாட்டார்கள். நாகநந்தி பிக்ஷு மறைந்ததைப் பற்றி யாரும் கவனிக்க மாட்டார்கள். நியாயமாக இந்தச் சளுக்க ராஜ்யம் எனக்கு உரியது. நான் மனதார இஷ்டப்பட்டு உனக்கு இந்த சாம்ராஜ்யத்தைக் கொடுத்தேன். உன் உயிரைக் காப்பாற்றினேன். சென்ற முப்பத்தைந்து வருஷமாக உன்னுடைய க்ஷேமத்தையும் மேன்மையையும் தவிர வேறு எண்ணமே இல்லாமலிருந்தேன். ஆனால் நெஞ்சில் ஈவிரக்கமற்றவனும், சகோதர வாஞ்சையற்றவனும், நன்றியற்ற கிராதகனுமான நீ என்னை இன்று பலர் முன்னிலையில் அவமானப் படுத்தினாய்! ஆ! இந்தப் பூமி பிளந்து உன்னை இன்னும் விழுங்கவில்லையே என்பதை நினைத்தால் எனக்குப் பரம ஆச்சரியமாயிருக்கிறது!"

"அண்ணா! அண்ணா! நீ என்ன சொல்கிறாய்? என்னை இப்படியெல்லாம் சபிக்க உனக்கு எப்படி மனம் வருகிறது? உனக்கு நான் என்ன துரோகம் செய்து விட்டேன்? என்ன அவமானப் படுத்தி விட்டேன்?......"

"இன்னும் என்ன அவமானம் செய்ய வேண்டும்? இன்னும் என்ன துரோகம் செய்ய வேண்டும்? சிவகாமி உன் காலில் விழுந்து மன்னிப்புக் கோரியதாக அழியாத வர்ணத்தில் சித்திரம் எழுதச் செய்ததைக் காட்டிலும் வேறு என்ன அவமானம் எனக்கு வேண்டும்? இம்மாதிரி என் இருதயத்தில் விஷந்தோய்ந்த வேலைப் பாய்ச்சுவதைக் காட்டிலும் வேறு என்ன துரோகம் எனக்குச் செய்ய வேண்டும்? இதற்காகவா என்னை நீ இங்கே அழைத்து வந்தாய்? இதற்காகவா இந்தக் கலை விழா நடத்தினாய்? ஆகா! துஷ்ட மிருகமே! விஷப் பாம்பே! உன் தலையிலே இடி விழப் போகிறது, பார்! ஒரு கலையைக் கொன்று இன்னொரு கலையை அவமானப்படுத்திய உனக்காக எரிவாய் நரகம் காத்திருக்கிறது பார்!......"

"அண்ணா! உனக்கு என்ன வந்து விட்டது? அந்தப் பல்லவ நாட்டு நடனக்காரி உன்னை என்ன செய்து விட்டாள்? உடல் இரண்டும் உயிர் ஒன்றுமாக இருந்த சகோதரர்களை இப்படிப் பிரிப்பதற்கு அவளிடம் அப்படி என்ன சக்தி இருக்கிறது? அண்ணா! அண்ணா! என் முகத்தைப் பார்த்துச் சொல்லு! நமது முப்பத்தைந்து வருஷத்து அன்யோன்ய சிநேகத்தை நினைத்துக்கொண்டு சொல்லு! அன்றொரு நாள் இதே பாறைமீது உட்கார்ந்து நாம் கட்டிய ஆகாசக் கோட்டைகளையும், அவற்றையெல்லாம் பெரும்பாலும் காரியத்தில் நிறைவேற்றி வைத்ததையும் எண்ணிப் பார்த்துச் சொல்லு!......இந்தத் தெய்விக வாதோரா நதியின் சாட்சியாக, இந்தப் பர்வத சிகரங்கள் சாட்சியாக ஆகாசவாணி பூமாதேவி சாட்சியாகச் சொல்லு! என்னைக் காட்டிலும் உனக்கு அந்தக் காஞ்சி நகரத்துப் பெண் மேலாகப் போய்விட்டாளா? அவளுக்காகவா இப்படியெல்லாம் நீ எனக்குச் சாபம் கொடுக்கிறாய்?"

முன்னையெல்லாம் காட்டிலும் கடினமான குரோதம் நிறைந்த குரலிலே புத்த பிக்ஷு கூறினார்:—

"ஆமாம், ஆமாம்! புத்த பகவானுடைய பத்ம பாதங்கள் சாட்சியாகச் சொல்கிறேன். சங்கத்தின் மீதும் தர்மத்தின் மீதும் ஆணையிட்டுச் சொல்கிறேன். உன்னைக் காட்டிலும் ஆயிரம் மடங்கு எனக்குச் சிவகாமி மேலானவள்தான்! நீயும் உன் சாம்ராஜ்யமும் உன் புத்திர மித்திரர்களும் அவளுடைய கால் தூசுக்குச் சமமாக மாட்டீர்கள். அவளை அவமானப் படுத்திய நீயும் உன் சந்ததிகளும் சர்வநாசமடையப் போகிறீர்கள்! அந்தச் சரணாகதி சித்திரத்தை எழுதிய சித்திரக் கலைஞனின் கதி என்ன ஆயிற்று, தெரியுமா?"

"அடிகளே! அந்தத் துர்ப்பாக்கியனை என்ன செய்து விட்டீர்கள்?"

புத்த பிக்ஷு பயங்கரமான சிரிப்பு ஒன்று சிரித்தார்.

பார்த்துக் கொண்டேயிரு! இன்னும் சற்று நேரத்துக்கெல்லாம் யாராவது வந்து சொல்வார்கள்!"

"அண்ணா! ஒன்று நான் தெரிந்து கொண்டேன். இளம் பிராயத்திலிருந்தே பிரம்மசரியத்தையும் பிக்ஷு விரதத்தையும் மேற்கொள்வது ரொம்பத் தவறானது. இல்வாழ்க்கையின் இன்ப துன்பங்களை அநுபவித்து விட்டுத் தொலைத்த பிறகுதான் சந்நியாசம் மேற்கொள்ள வேண்டும். வாலிபத்திலேயே வாழ்க்கை வைராக்யம் கொள்கிறவர்கள் உன்னைப் போல்தான் பிற்காலத்தில் யாராவது ஒரு மாயக்காரியின் மோக வலையில் விழுந்து பைத்தியமாகி விடுகிறார்கள்!......"

"புலிகேசி! ஜாக்கிரதை! இத்தனை நேரம் பொறுத்திருந்தேன். இனிமேல் சிவகாமி தேவியைப் பற்றி நீ ஒரு வார்த்தை சொன்னாலும் பொறுக்க மாட்டேன்!"

"அடிகளே! சிவகாமி தேவியிடம் தாங்கள் இவ்வளவு பரிவு காட்டுகிறீர்களே? அவளுடைய கௌரவத்தை இவ்வளவு தூரம் காப்பாற்றுகிறீர்களே? தங்களிடம் சிவகாமி தேவிக்கு இவ்வளவு தூரம் பரிவு இருக்கிறதா? தாங்கள் அவளிடம் வைத்திருக்கும் அபிமானத்தில் ஆயிரத்தில் ஒரு பங்காவது அவளுக்கு உண்டா? ..."

புலிகேசி சக்கரவர்த்தியின் மேற்படி கேள்வி புத்த பிக்ஷுவின் உள்ளத்தை வாள் கொண்டு அறுப்பதுபோல் அறுத்தது என்பதை அவருடைய முகக் குறி காட்டியது. அந்தச் சொல்ல முடியாத வேதனையை வெகு சீக்கிரத்திலேயே நாகநந்தி சமாளித்துக் கொண்டு திடமான குரலில், "அந்தக் கேள்வி கேட்க உனக்கு யாதொரு பாத்தியதையும் இல்லை. ஆனாலும் சொல்கிறேன். சிவகாமி தேவி உன்னைப்போல் அவ்வளவு கல் நெஞ்சம் கொண்டவள் அல்ல. அவளுக்கு என் பேரில் பிரியம் இருக்கத்தான் செய்கிறது" என்றார்.

"அண்ணா! நீ இப்படி ஏமாறக் கூடியவன் என்று கனவிலும் நான் எதிர்பார்க்கவில்லை!"

"தம்பி! நான் ஏமாறவில்லை. நாம் அஜந்தா யாத்திரை கிளம்பிய அன்று இரவு சிவகாமி என் உயிரைக் காப்பாற்றினாள்."

"அது என்ன கூத்து? உன் உயிருக்கு அப்படி என்ன ஆபத்து வந்தது, சிவகாமி காப்பாற்றுவதற்கு?"

"இந்த விஷக் கத்தியால் என்னை நானே குத்திக் கொள்ளப் போனேன். சிவகாமி என் கையைப் பிடித்து என்னைக் காப்பாற்றினாள்!" என்று புத்த



பிக்ஷு கூறியபோது, அவரது அகக் கண் முன்னால் அந்தக் காட்சி அப்படியே தோன்றியது. அவருடைய கண்களில் கண்ணீர் ததும்பிற்று.

புலிகேசி புன்னகை புரிந்து "ஐயோ! மகா மேதாவியான உன்னுடைய புத்தியா இப்படி மாறிப் போய்விட்டது? சிவகாமி எதற்காக உன் உயிரைக் காப்பாற்றினாள், தெரியுமா? அவளுடைய காதலன் மாமல்லனுடைய கையினால் நீ சாக வேண்டும் என்பதற்காகத்தான். அந்த மூடப் பெண் இன்னமும் அப்படிக் கனவு கண்டு கொண்டிருக்கிறாள்!" என்றான்.

* * *

மேலே விவரித்த அண்ணன் தம்பி சம்பாஷணை நேயர்களுக்கு நன்கு விளங்கும் பொருட்டு அன்று மத்தியானம் நடந்த ஒரு சம்பவத்தை விவரிக்க வேண்டும். புலிகேசி சக்கரவர்த்தியும் புத்த பிக்ஷுவும் சீன யாத்ரீகரும் மற்றும் சாம்ராஜ்யத்தின் பிரமுகர்களும் ஒரு கும்பலாக அஜந்தாவின் அதிசயச் சித்திரங்களைப் பார்வையிட்டுக்கொண்டு வந்தார்கள். சைத்யங்கள், விஹாரங்கள் இவற்றின் உள் சுவர்களிலே புத்த பகவானுடைய தெய்விக வாழ்க்கை வரலாறும், அவருடைய பூர்வ அவதாரங்களின் சம்பவங்களும் சித்திரிக்கப் பட்டிருந்தன. வெளித் தாழ்வாரச் சுவர்களிலோ அந்தக் காலத்துச் சமூக வாழ்க்கைச் சித்திரங்கள் சில காணப்பட்டன.

அப்படிப்பட்ட நவீன வாழ்க்கைச் சித்திரங்களில் புலிகேசி சக்கரவர்த்தியின் வாழ்க்கை சம்பந்தமான இரு முக்கிய சம்பவங்கள் சித்திரிக்கப்பட்டிருந்தன. அவற்றில் ஒன்று, புலிகேசி சக்கரவர்த்தி இராஜ சபையில் சிம்மாசனத்தில் கம்பீரமாக வீற்றிருக்க, பாரசீக மன்னனிடமிருந்து வந்த தூதர்கள் சக்கரவர்த்திக்குக் காணிக்கைகள் சமர்ப்பித்த காட்சியாகும்.

மேற்படி காட்சி எல்லாருக்கும் மிக்க குதூகலத்தை அளித்ததில் வியப்பொன்றுமில்லை. ஆனால், மற்றொரு சித்திரம் அப்படிக் குதூகலத்தை உண்டாக்குவதற்குப் பதிலாக அனைவருக்கும் ஒருவித அசந்துஷ்டியை உண்டாக்கிப் பின்னால் பெரும் விபரீதம் நேர்வதற்கும் காரணமாயிற்று.

அந்த விபரீதச் சித்திரம், புலிகேசி சக்கரவர்த்தியின் பாதங்களில் ஒரு நடன கலைவாணி தலையை வைத்து வணங்கி மன்னிப்புக் கோருவது போல் அமைந்த சித்திரந்தான். இதைத் தீட்டிய ஓவியக் கலைஞன் மிகச் சிறந்த மேதாவி என்பதில் சந்தேகமில்லை. புலிகேசியின் முகத்தையும் தோற்றத்தையும் அமைப்பதில் அவன் கற்பனா சக்தியின் உதவியைப் பயன் படுத்தியிருந்தான். அந்தச் சித்திரத்தில் புலிகேசி, துஷ்ட நிக்கிரஹம் செய்வதற்கு முனைந்திருக்கும் தேவேந்திரனையொத்துக் கோப சௌந்தரியம் பொருந்தி விளங்கினான். கீழே கிடந்த பெண்ணின் தோற்றத்தில் அளவில்லாத சோகத்தையும் மன்றாடி மன்னிப்புக் கோரும் பாவத்தையும் வெகு அற்புதமாகக் கொண்டு வந்திருந்தான். பக்கத்திலே நின்ற சேடிப் பெண்களின் பயந்த இரக்கம் வாய்ந்த தோற்றத்தைக் கொண்டு அந்த நடனப் பெண்ணின் சரணாகதியைப் பன் மடங்கு பரிதாப முள்ளதாகச் செய்திருந்தான்.

இவ்வளவுக்கும் பின்னால் சற்றுத் தூரத்திலிருந்து புத்த பிக்ஷு ஒருவர் கவலை கொண்ட முகத் தோற்றத்துடன் விரைந்து வருவதையும் காட்டியிருந்தான். அந்தப் பிக்ஷுவைப் பார்த்தவுடனேயே, அவர் மேற்படி நடனப் பெண்ணை இராஜ தண்டனையிலிருந்து காப்பாற்றுவதற்காகவே விரைந்து வருகிறார் என்ற எண்ணம் எல்லாருடைய மனதிலும் உதயமாகும்படி இருந்தது. சித்திரங்களை விளக்கிக் கூறி வந்தவர் மேற்படி சித்திரத்தின் தாத்பரியத்தைப் பற்றிச் சில வார்த்தைகள் சொன்னவுடனேயே அங்கிருந்தவர்கள் அனைவரும் ஏககாலத்தில் நாகநந்தி பிக்ஷுவை நோக்கினார்கள். ஒரு கண நேரம் நாகநந்தியின் முகம் படம் எடுத்த பாம்பைப் போல் காட்சியளித்தது. அடுத்த கணம் நாகநந்தி தம்மை நூறு கண்கள் கூர்ந்து நோக்குகின்றன என்பதை உணர்ந்தார். உடனே அவருடைய முகபாவம் முற்றிலும் மாறி அதில் வஞ்சப் புன்னகை தோன்றியது.

"அற்புதம்! அற்புதம்! இந்தச் சித்திரத்துக்கு இணையான சித்திரம் உலகத்திலேயே இருக்க முடியாது! என்ன பாவம்? என்ன கற்பனை? இதைத் தீட்டிய ஓவியப் பிரம்மா யார்? அவருக்குத் தக்க வெகுமதி அளிக்க வேண்டும்!" என்று நாகநந்தி கூறினார்.



# படி மாவு

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

யுத்தம் முடிந்தபின் முடி சூட்டப்பட்ட யுதிஷ்டிரன் ஒரு பெரிய அசுவமேத யாகம் செய்தான். பாரதநாட்டு மன்னர்களெல்லாம் வந்து கூடியிருந்தார்கள். யாகம் வெகு சிறப்பாக நடந்தது. எட்டுத் திசைகளிலும் பறை அறையச் செய்து அழைக்கப் பட்டு வந்த பிராமணர்களும் ஏழைகளும் திக்கற்றவர்களும் தானங்கள் பெற்றார்கள். சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறபடி எல்லா விதத்திலும் சிறப்பாக யாகம் நடத்தப் பட்டது.

அந்தச் சமயத்தில் எங்கிருந்தோ ஒரு கீரிப் பிள்ளை திடீர் என்று யாகசாலைக்குள் பிரவேசித்துச் சபை நடுவில் தைரியமாக எல்லாரையும் பார்த்துப் பெரிய சிரிப்புச் சிரித்தது. மனிதனைப் போல் ஒரு பிராணி சிரிப்பதைப் பார்த்து இதென்ன நம்முடைய யாகத்தைக் கெடுக்க வந்த பேயோ பிசாசோ என்று ரித்துவிக்குகள் திடுக்கிட்டார்கள்.

கீரிப் பிள்ளையின் உடம்பு ஒரு பக்கம் முழுதும் சுவர்ண மயமாகப் பிரகாசித்தது. நானா தேசங்களி லிருந்து வந்து சபையில் கூடியிருந்த அரசர்களையும் படித்த பிராமணர்களையும் நோக்கி அந்த அற்புதக் கீரிப்பிள்ளை பேச ஆரம்பித்தது.

"மன்னர்களே! உங்களுடைய யாகம் ரொம்ப சிறப்பாக நடந்ததாக நீங்கள் எண்ணுகிறீர்கள். ஒரு காலத்தில் குரு க்ஷேத்திரத்தில் வசித்துவந்த ஒரு ஏழைப் பிராமணர் ஒரு படி மாவு தானம் செய்தார். அவர் செய்த அந்த தானத்திற்கு உங்கள் அசுவமேதமும் அதில் செய்யப் பட்ட எல்லா தானங்களும் சேர்ந்து சமமாகாது. உங்கள் யாகத்தைப் பற்றி ஏன் வீண் பெருமைப் படுகிறீர்கள்?" என்று சொல்லிற்று.

இவ்வாறு கீரிப் பிள்ளை சொன்னதைக் கேட்டுச் சபையோர் வியப்படைந்தார்கள். யாகம் செய்த பிராமணர்கள் அந்தக் கீரியண்டை போய், "சாதுக்கள் கூடியிருக்கும் யாகத்திற்கு நீ எங்கிருந்து வந்தாய்? நீ யார்? ஏன் எங்களுடைய யாகத்தை இவ்வாறு நிந்திக்கிறாய்? சாஸ்திரம் தவறாமல் சகல சாமக்கிரியைகளும் சேர்த்துக் கிரமமாக நடத்தப்பட்ட இந்தப் பெரிய அசுவமேத யாகத்தை நீ குறை கூறுவது சரியல்ல. யாகத்திற்கு வந்தவர்கள் எல்லாரும் தக்க முறையில் பூஜிக்கப்பட்டார்கள். எல்லாரும் திருப்தியடையுமளவு தானங்கள் கொடுக்கப் பட்டன. மந்திரங்கள் ஓதப்பட்டு அவிகளும் அக்கினியில் விடப்பட்டன. நான்கு வருணத்தார்களும் சந்தோஷமடைந்திருக்கிறார்கள். நீ ஏன் இவ்விதம் சொல்லுகிறாய்? எங்களுக்கு விஷயத்தை விளக்க வேண்டும்" என்று சொன்னார்கள்.

இதைக் கேட்டு அந்தக் கீரி மறுபடியும் சிரித்துச் சொன்னதாவது:

"பிராமணர்களே! நான் சொன்ன வார்த்தை பொய்யல்ல. உங்கள் பேரிலாவது யுதிஷ்டிர மகாராஜாவின் பேரிலாவது எனக்கு அசூயை இல்லை. மிகவும் சிறப்பாகச் செய்யப்பட்ட இந்த யாகம் உண்மையில் நான் பார்த்த ஏழைப் பிராமணரின் தானத்திற்குச் சமமாகாது. குரு க்ஷேத்திரத்தில் வசித்த அந்த ஏழைப் பிராமணர்தான் சிறந்த கொடையாளி யாவார். அதன் பயனாக அவர் உடனே பத்தினி, மகன், மருமகன் இவர்களுடன் சுவர்க்கம் ஏறிச் சென்றார். நான் பார்த்த நிகழ்ச்சியைச் சொல்லுகிறேன் கேளுங்கள்.

• • •

உங்கள் யுத்தம் நடப்பதற்கு முன் குரு க்ஷேத்திரத்தில் ஒரு பிராமணர் உஞ்ச விருத்தி ஜீவனம் நடத்தி வந்தார். அதாவது, கீழே உதிர்ந்து கிடக்கும் தானியத்தைப் பொறுக்கி அவரும், அவர் மனைவி, மகன், மருமகள் ஆகிய நால்வரும் தினசரி வேண்டிய ஆகாரத்தைப் புசித்து வந்தார்கள். ஒவ்வொரு நாளும் பகலின் ஆறாவது பாகத்தில், அதாவது பிற்பகல் ஒன்றரை மணிக்கு மேல் ஒரே வேளை உணவு எல்லாருமாகக் கூடி உட்கார்ந்து சாப்பிடுவார்கள். ஒவ்வொரு நாள் போதிய அரிசி கிடைக்காது. அப்படி நேர்ந்தால் உபவாசமிருந்து அடுத்த நாள் ஆறாவது காலத்தில்தான் சாப்பிடுவார்கள். ஒரு நாள் கிடைத்ததை மறுநாள் வைத்துக் கொள்ள மாட்டார்கள். இது அவர்களுடைய விரதம்.

இவ்வாறு விரத வாழ்க்கை இவர்கள் நடத்தி வந்தபோது ஒரு காலத்தில் மழையில்லாமல் நாட்டில் கடும் பஞ்சம் நேரிட்டது. எங்கும் ஜனங்கள் உணவின்றிக் கஷ்டப் பட்டார்கள். மழையில்லாமல் விவசாயம் விளைவு ஏதுமில்லாமல் போனபடியால் சாப்பாட்டுக்கு வேண்டிய தானியம் வயல்களில் சிந்திக் கிடக்கவில்லை. அநேக நாள் பிராமணரும் அவர் குடும்பமும் பட்டினியாக இருக்க நேரிட்டது. ஒரு நாள் வெயிலிலும் பசியிலும் அலைந்து கஷ்டப்பட்டு ஒரு படி சோளம் சம்பாதித்து வீடு வந்து சேர்ந்தார்கள். அந்த ஒரு படி சோளத்தை மாவாக அரைத்து ஜபம் முதலியன விதிப்படி செய்து மாவை நாலு சம பாகமாகப் பிரித்துக் கொண்டு பகவானை நினைத்து மகிழ்ச்சியுடன் சாப்பிட உட்கார்ந்தார்கள்.

அந்தச் சமயத்தில் ஒரு பிராமணர் பசியோடு அங்கே வந்து சேர்ந்தார். அதிதி ஒருவர் வந்தாரே என்று அவரை நமஸ்கரித்து உபசரித்து உட்காரச் சொன்னார்கள். களங்கமற்ற பரிசுத்த மனப்பான்மை படைத்த அந்தப் பிராமணருக்கும் அவருடைய மனைவி மகன் மருமகளுக்கும் அதிதியை உபசரிக்கப் பெற்றோமே என்று மகிழ்ச்சி பொங்கிற்று. வந்தவரைப் பார்த்து, "பிராமண சிரேஷ்டரே, நான் ஏழை, இந்த மாவு நியமத்துடன் சம்பாதிக்கப்பட்டது. இதை நீர் பெற்றுக் கொள்ள வேண்டும். உமக்கு மங்களம் ஆகுக" என்று சொல்லி பிராமணர் தம்முடைய பங்கு காற்படி மாவை அவருக்குக் கொடுக்க, அதிதியானவர் அந்த மாவைப் புசித்தார்.

ஆனால் அவருக்குப் பசி தீரவில்லை. கொடுத்த மாவைச் சாப்பிட்டு விட்டுத் திருப்தி அடையாத பசிப்பார்வையுடன் பார்த்தார். அதைக் கண்டு பிராமணர் வருத்த மடைந்தார். என்ன செய்வது என்று சிந்தித்துக் கொண்டிருப்பதை மனைவி பார்த்துச் சொன்னாள்:

"என்னுடைய பாகத்தையும் இவருக்குக் கொடும். இவர் திருப்தியடைந்தால் எனக்குப் போதும்."

இவ்வாறு சொல்லித் தன் மாவையும் புருஷனிடம் கொடுத்து அதிதிக்குக் கொடுக்கச் சொன்னாள்.

"பதிவிரதையே! விலங்கு புழு பூச்சி முதலியவைகூடத் தம் இனத்தில் பெண்களைக் கவனத்துடன் போஷிக்கின்றன. நீ சொல்லுவது சரியல்ல. உன்னால் பணிவிடை செய்யப்பட்டு இல்லறம் நடத்தும் நான் உன்னை ரக்ஷிக்காமல் பசியில் தவிக்க விட்டால் எனக்கு என்ன நலன் உண்டாகும்? அன்புக் குரியவளே! எலும்பும் தோலுமாகப் பசியில் நீ வாடிக் கொண்டிருக்க உன்னைப் பட்டினிப் போட்டு நான் அதிதி பூஜை செய்வதில் என்ன பயன் உண்டாகும்?" என்று மனைவி சொன்னதை பிராமணர் மறுத்தார்.

"பிராமணரே! தருமமும் பொருளும் எல்லா புருஷார்த்தமும் நம்மிருவருக்கும் பொதுவல்லவா? கிருபை செய்து என்னுடைய கால் பங்கு மாவையும் பெற்றுக் கொண்டு அதிதிக்குக் கொடுப்பீராக. என்னைப் போலவே நீரும் பசியால் பீடிக்கப்பட்டு வருகிறீர். நான் சொன்னதை மறுக்க வேண்டாம்" என்று மனைவி வற்புறுத்தினாள்.

பிறகு, அவரும் ஒப்புக்கொண்டு அந்த மாவையும் அதிதிக்குக் கொடுத்தார். அவர் அதைப் பெற்றுக்கொண்டு புசித்தார். ஆனால் இன்னும் பசி தீராமலேயிருந்தார். உஞ்ச விருத்திப் பிராமணர் மிகுந்த மனக் கவலைப்பட்டார்.

இதைப் பார்த்துக் கொண்டிருந்த பிராமணருடைய மகன், "அப்பா!



என்னுடைய பங்கையும் அதிதிக்குக் கொடுத்துத் திருப்தி செய்யும்" என்றான்.

தகப்பன் இதைக் கேட்டு வருத்த முற்று "குழந்தாய், நான் வயது முதிர்ந்தவன். நான் பசியைப் பொறுத்துக் கொள்ள முடியும். பாலர்களுடைய பசி தீவிரமானது. உன்னுடைய பங்கை வாங்கிக் கொள்ள எனக்கு மனம் வரவில்லை" என்றார்.

குமாரன் கேட்கவில்லை. "வயது முதிர்ந்த பிதாவைக் காப்பாற்றுவது புத்திரனுடைய கடமை. பிதா வேறு, புத்திரன் வேறு அல்ல. பிதாவே புத்திரனாக உண்டாகிறானல்லவா? என் பங்குமாவும் உம்முடையதே. நான் கொடுப்பதைப் பெற்றுக் கொண்டு அதிதியைத் திருப்தி செய்யவும்" என்று வேண்டிக் கொண்டான்.

"குழந்தாய், சீலத்திலும் இந்திரிய அடக்கத்திலும் எல்லா விதத்திலும் நான் உன்னைக் கண்டு பெருமைப்படத் தக்கவனாக இருக்கிறாய். உனக்கு எல்லா நலனும் ஆகுக. உன்னுடைய மாவைப் பெற்றுக் கொள்ளுகிறேன்" என்று சந்தோஷத்துடன் பெற்றுக் கொண்டு அதையும் அதிதிக்குக் கொடுத்தார்.

அதிதி மூன்றாவது பாகத்தையும் பெற்றுக் கொண்டு அதையும் சாப்பிட்டார். இன்னும் திருப்தி யாகாமலே யிருந்தார். உஞ்சவிருத்திப் பிராமணர் வெட்கப்பட்டார். இன்னது செய்வது என்று தெரியாமல் ஏங்கி நிற்கும் மாமனாரைப் பக்கத்திலிருந்த மருமகள் பார்த்து, "சுவாமி, என் பங்கையும் சந்தோஷமாகவே கொடுக்கிறேன். ஒப்புக்கொண்டு அதை அதிதிக்குக் கொடுக்க வேண்டும். உம்முடைய ஆசீர்வாதத்தால் எனக்கு அக்ஷயமான நலன் உண்டாகும்" என்று சொன்னாள்.

இதைக் கேட்டு மாமனார், "ஒழுக்கம் தவறாதவளே! நிறம் மாறி இளைத்துப் போயிருக்கும் உன்னைப் பசியால் பீடிக்கப்பட விட்டு உன்னுடைய பங்கு மாவையும் நான் வாங்கி அதிதிக்குக் கொடுத்தால் நான் தருமத்தை அழிப்பவனாவேன். சிறுமியாகிய நீ பசியால் தவிப்பதை நான் எவ்வாறு பார்த்துச் சகிப்பேன்?" என்று மறுதளித்தார்.

அவள் விடவில்லை, "சுவாமி! நீர் எனக்குப் பிரபுவின் பிரபு, குருவின் குரு, தெய்வத்திற்குத் தெய்வம். என்னுடைய மாவைப் பெற்றுக் கொள்ள வேண்டும். இந்தச் சரீரம் குருநாதனின் பணிவிடைக்காகத்தானே இருக்கிறது? நீர் என்னை நல்ல கதி அடையச் செய்ய வேண்டும். என்னுடைய மாவைப் பெற்றுக் கொள்ள வேண்டும்" என்று பலவாறாக வற்புறுத்தினாள்.

பிராமணர், "பெண்ணே! பதிவிரதையே! நீ எப்பொழுதும் எல்லா பாக்கியமும் அடைவாயாக!" என்று ஆசீர்வதித்து அவளுடைய மாவையும் பெற்றுக் கொண்டு அதிதிக்குக் கொடுத்தார்.

அதை வாங்கிச் சாப்பிட்ட பின் அதிதியாக வந்த பிராமணர் சந்தோஷமடைந்தார். "பரிசுத்தமானதும் சக்திக்குத் தக்கவாறு கொடுக்கப் பட்டதுமான உம்முடைய தானத்தால் மிகவும் திருப்தி அடைந்தேன். உங்களுடைய தானம் அற்புதமான தானம். தேவர்கள் பூமாரி பொழிகிறார்கள், அதோ! தேவரிஷிகளும் தேவர்களும் கந்தர்வர்களும் உம்மைத் தரிசிக்கப் பரிஜனங்களோடு விமானங்களில் வந்து நிற்கிறார்கள். நீரும் உம்முடைய மனைவியும் மகனும் மருமகளும் சுவர்க்கம் போவீர்கள். நீர் செய்த தானத்தினால் உம்முடைய முன்னோர்களுக்காகவும் நீர் சுவர்க்கம் சம்பாதித்தவரானீர். சாதாரணமாகப் பசியானது அறிவை அழிக்கும். தரும சிந்தனையைக் கெடுக்கும். ஞானவான் கூடப் பசியினால் உறுதியை இழப்பான். மனைவி மகனிடத்திலுள்ள அன்பையும் பாராமல் தருமத்தையே பெரிதாக நீர் எண்ணினீர். அநேக ராஜசூயங்களும் அசுவமேதங்களும் உம்முடைய தானத்துக்குச் சமமாகா. காத்திருக்கும் திவ்விய விமானத்தில் ஏறுங்கள் — சுவர்க்கம் செல்லுங்கள்" என்று சொல்லி மறைந்தார்.

• • •

இவ்வாறு உஞ்சவிருத்திப் பிராமணருடைய கதையைச் சொல்லிவிட்டுக் கீரி மீண்டும் சொன்னதாவது: "அந்த பிராமணருடைய சோள மாவின் மணத்தால் என்னுடைய தலை சுவர்ண மயமாகி விட்டது. பிறகு மாவு பரிமாறின இடத்தில் போய் நான் புரண்டேன். சிந்திக் கிடந்த மாத் தூள்கள் பட்டு என் உடலில் ஒரு பாதி தங்கமாயிற்று. பாதி உடல் சுவர்ணமய மாயிற்றே என்று நான் மற்றொரு பாதியும் அவ்வாறே ஆகவேண்டுமென்று பல தபோவனங்களுக்கும் யாகம் செய்யும் இடங்களுக்கும் போய்ப் பார்த்து வருகிறேன். புகழ்பெற்ற தருமபுத்திரர் அசுவமேத யாகம் செய்கிறார் என்று கேள்விப் பட்டு ஆசையுடன் இங்கேயும் வந்தேன். ஆயினும் நான் சுவர்ணமயமாகச் செய்யப் படவில்லை. அதனால்தான் இந்த யாகம் ஒரு படி மாவுக்குச் சமமில்லை என்றேன்."

இவ்வாறு சொல்லி விட்டுக் கீரிப் பிள்ளை மறைந்து போயிற்று.







# தாயின் போதனை

ராதா

"ஒரே ஒரு ஊரில் ஒரு குடியானவன் இருந்தான். அவன் ஒரு நாயை மிக்க அன்புடன் வளர்த்து வந்தான். அந்த நாய் அவனை விட்டுப் பிரிவதில்லை. அவன் ஒரு நாள் நீராட மடுவிற்குப் போனான். அந்த நாய் அவனுக்கு முன்னே போயிற்று. அது மடுவிலிருக்கும் முதலையைக் கண்டது. உடனே அது வேக வேகமாகக் குரைத்துக் கொண்டே ஓடி வந்து அந்தக் குடியானவனை மடுவில் இறங்காதபடி தடுத்தது.

குடியானவனுக்கு மடுவில் முதலையிருக்கும் என்ற விஷயம் தெரியாததினால் அவன் நாயைத் தள்ளி விட்டுத் தண்ணீரிலே இறங்கப் போனான். அந்த நாய் அவன் உடுத்திருந்த உடையைக் கவ்வி இழுத்து, மீண்டும் அவனைத் தடுத்தது. அவன் அதைக் காலால் உதைத்து விட்டு நீரில் இறங்கினான்.

அந்த நாய் 'நமக்குச் சோறு போட்டு வளர்க்கும் எஜமானன் முதலைக்கு இரையாவதை நாம் பார்த்துக் கொண்டிருக்கலாமா? நம்மைக் காத்தவனை நாம் காக்க வேண்டாமா?' என்று எண்ணி அந்தக் குடியானவனுக்கு முன்னால் தானே மடுவில் குதித்து அவனை இறங்க முடியாதபடி தடுத்தது. உடனே அங்கிருந்த முதலை ஒன்று நாயை மடுவில் பிடித்து இழுத்துக் கொண்டு போகத் தொடங்கியது. அப்பொழுதுதான் குடியானவனுக்கு நாய் தன்னை மடுவில் இறங்க விடாமல் தடுத்ததற்குக் காரணம் தெரிந்தது. தன்னுடைய உயிரை விட மேலாக மதித்து வந்த அருமை நாயை முதலை இழுத்துச் செல்வதைக் காண அவனால் சகிக்க முடியவில்லை. 'ஆ! நமது ஆருயிர் போன்ற நாயை முன்பின் யோசியாமல் அல்லவா இழந்து விட்டோம்!' என்று சொல்லிக் கண்ணீர் விட்டான். ஆனால் முன் யோசனை இல்லாமல் அவசரப்பட்டுக் காரியம் செய்து விட்டு அப்புறம் கண்ணீர் விடுவதால் என்ன பிரயோஜனம்? ......

ஆகையால், குழந்தைகளே! முன் யோசனையில்லாத மூட மனிதர்களுடன் அறிவுள்ள நாய்கள் சிநேகம் செய்யவே கூடாது!" என்று தாயார் நாய், குழந்தை நாய்களுக்கு நீதி சொல்லி முடித்தது.

# பழந்தமிழ்ச் செல்வம்

[ச. கிருஷ்ணய்யர் பி. ஏ. பி. எல்.]

வருடக் கணக்காக எத்தனையோ சங்கீதக் கச்சேரிகளைக் கேட்கிறோம்; மகாநாடுகளில் பலவிதச் சர்ச்சைகளைக் கவனிக்கிறோம். ஆனால் நமது தென்னாட்டு அருங்கலையான கர்நாடக சங்கீதம் எங்கிருந்து வந்தது, அதன் சாஸ்திர நுட்பங்கள் யாவை என்ற ஆராய்ச்சிகளில் போதிய கவனம் இருப்பதில்லை. அவ்வாறான ஆராய்ச்சியில் ஈடுபடுபவர்களுக்கு உதவும் நூல்களில், எல்லா அம்சங்களையும் சாங்கோபாங்கமாய்க் குறிப்பிட்டு நுண்ணறிவு புகட்டும் நூல் ஏதாவது உண்டா என்றால், அது தஞ்சை மு. ஆபிரகாம் பண்டிதரால் இயற்றப்பட்ட 'கருணாமிருத சாகரம்' தான். ராகங்களை விளக்கும் அதன் இரண்டாம் புத்தகம், அவரது புதல்வர் டாக்டர் ஏ. எஸ். பாண்டியனாலும், புதல்வி மரகதவல்லி துரை பாண்டியனாலும் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. 352 பக்கங்களுள்ள பெரிய புஸ்தகம். படிக்கப் படிக்கத் திகட்டாதது. ஒவ்வொரு பக்கமும் சங்கீதக் கலையில் பூர்வீகத் தமிழர்களின் நுட்ப ஞானத்தையும், பெருமையையும் விளக்கிக் காட்டுகிறது.

நமது ராகங்களில் வழங்கும் ஸ்வரங்கள் ஸ்தூலமாய் 12 என்று சொன்னாலும், நுட்ப முறையை உற்றுக் கவனிக்கும் போது, ராகங்கள் பன்னிரண்டுக்கு மேற்பட்ட நுட்பமான சுருதிகளாலானவை என்பதும், அந்த சுருதிக் கணக்குத் தவறினால் ராகவடிவம் சிதைவுறும் என்பதும் நன்கு தெரிந்தவை. இச்சுருதிகள் 22 என்று சில சம்ஸ்கிருத நூலாசிரியர்கள் திட்டப்படுத்தியிருந்த போதிலும், வழங்கும் ராகங்கள் அவற்றுக்குள் அடைபடவில்லை. இன்னும் நுட்பமான சுருதிகள் பல உண்டு என்பதை நன்கு அறிந்தே, பூர்வத் தமிழர்கள் 2, 1, $\frac{1}{2}$, $\frac{1}{4}$ அலகுகளாலான 12, 24, 48, 96 சுருதிகளை வைத்து ஆயப்பாலை, வட்டப்பாலை, திரிகோணப்பாலை, சதுரப்பாலை என்ற முறைகளைக் கையாண்டு, வகுக்கணக்கான ராகங்களுக்கு வழிகாட்டி, அவைகளில் இணை, கிளை, பகை, நட்புச் சுருதிகளை ஆராய்ந்து, இன்னிசைக்கு உதவாதவைகளைத் தள்ளி, ஸ்புடம் செய்து வழங்கக் கூடிய 12,000 ராகங்களைக் கணக்கிட்டு வைத்திருக்கிறார்கள்! இவைகளில் பல பண்கள் பாடப்பட்டு வந்தன. பதின்மூன்றாம் நூற்றாண்டில் சாரங்க தேவர் இயற்றிய சங்கீத ரத்னாகரம் என்னும் நூலில் தமிழிசையைப் பற்றிக் கண்டிருக்கும் சிறு குறிப்பிலிருந்து, அக்காலத்திலும் அதற்கு முன்னாலும் தேவாரம், திவ்வியப் பிரபந்தம் போன்ற பழந் தமிழ்ப் பொக்கிஷங்களிலிருக்கும் பல பிரபந்தங்கள், மேற்படி பண்களில் வழங்கி வந்திருக்கலாமென்றும் தெரிய வருகிறது.

ஷட்ஜபஞ்சமம், ஷட்ஜமத்யமம் முறைகளால் எப்படி 12 ஸ்வர ஸ்தானங்கள் உண்டாகும், இந்த ஸ்வரங்களின் கிரக மாற்றல், சுருதி பேதம், வர்ஜ்யாவர்ஜ்யம், வக்ரங்களால் எவ்வாறு பல ராகங்கள் கிடைக்கும் என்பவைகளைப் பற்றியும் பழந்தமிழ்நாட்டில் வெகு நுல்லியமாய் நிர்ணயித்திருக்கிறார்கள். அதன் பயனாக, 12 ஸ்வரங்களின் ஒரு வகை பேதத்தினால் ஏற்படும் 32 பிரதம ராகங்கள், மற்றொரு வகை பேதத்தினால் 72 கர்த்தாக்கள் பயக்கும் ருத்ரமேளம், 14 ஸ்வரங்களால் ஒரு வகையில் 200 கர்த்தாக்கள் அமையும் விஷ்ணு மேளம், 24 சுருதிகளால் 4,624 கர்த்தாக்கள் கொடுக்கும் பிரம்ம மேளம், இத்தகைய பல ராக திட்டங்கள், காலப் போக்கில், ஆராய்ச்சிக்கு மேல் ஆராய்ச்சியாக ஏற்பட்டன. ஆனால் மேற்படி திட்டங்களில், 1, 2, 3, 4 போன்ற முழு அலகு சுருதிகளுக்கு மாத்திரம்தான் இடம் உண்டு. $\frac{1}{4}$, $\frac{1}{2}$, $\frac{3}{4}$, $1\frac{1}{4}$, $1\frac{1}{2}$, $1\frac{3}{4}$ போன்றவைகளுக்குப் பொருத்தமில்லை. வழக்கத்திலேயோ, பல ராகங்களில் மேற்படி பின்ன அலகு சுருதிகள் தென்படுகின்றன. அதை நன்கு

---

கருணாமிருத சாகரம் — இரண்டாம் புத்தகம். மு. ஆபிரகாம் பண்டிதரால் இயற்றப்பெற்றது. தஞ்சை கருணாநிதி வைத்தியசாலை, டாக்டர் ஏ. எஸ். பாண்டியன், மரகதவல்லி துரைபாண்டியன், இவர்களால் பிரசுரிக்கப்பட்டது: விலை ரூ. 15.

அறிந்தே, சுத்த நுட்பமான சுருதிகளுக்கும் இடம் கொடுக்கும் திருகோணப்பாலை, சதுரப்பாலை முறைகளையும், பூர்வீகத் தமிழர்கள் கையாண்டு வந்தார்கள்.



மு. ஆபிரகாம் பண்டிதர்

இத்தகைய பூர்வீக ஆராய்ச்சிகளிலிருந்துதான் வெங்கடமகியினால் சிறுவப்பட்டதும், ருத்ராமேள முறையைச் சேர்த்ததும், பல பொருத்தங்களுடன் திருப்திகரமாயிருப்பதுமான 72 மேளகர்த்தாத் திட்டமும் பிறந்திருக்கலாம் என்பது ஊகமாகிறது. இப்படிப்பட்ட சுருதி நுண்ணறிவு மூலம்தான் ஸ்ரீ தியாகராஜர் போன்ற பெரியார்கள் அபூர்வ அழகுடன், பல ரக்தி ராகங்களில் கிருதிகளைச் சிருஷ்டித்திருக்க முடியும். இப்படி இசைத்தமிழின் உயிரான ராகம் செய்புமுறை, ஆலாபனை முறை, இவை இரகசியமாய்ப் பேணப்பட்டு நாளடைவில் மறைந்து போயிருக்கின்றன. தமிழ்ப் பெயர்களும் மாறுபட்டுப் போயின.

சுருதி விஷயங்களை முதல் புத்தகத்தில் விளக்கிய ஆபிரகாம் பண்டிதர், இரண்டாம் புத்தகத்தில் அவைகளை உபயோகித்து ஏற்படும் ராக விவரங்களைக் குறிக்கும் ஏராளமான அட்டவணைகளையும், சாதாரணமாய் வழங்கும் வகைகளுக்கு மேல், புதிய ராகங்கள், கீதங்கள், கிருதிகள் இவைகளைச் சிருஷ்டிக்கும் முறைகளையும் விளக்கியுள்ளார். ராக அட்டவணைகளைக் கவனிக்கும் போது, இப்போது நாம் கேட்கும் சில ராகங்களும், பரதர் தமது காலத்திற்கு முற்பட்ட மிகப் பழமையான நூல்களில் காணப்பட்டிருந்ததாகச் சொல்லும் நாய் ராகங்களும், ஸ்திரீ, புருஷ ராகங்களென ஹிந்துஸ்தானி முறையில் காணப்படும் பாகுபாடுகளும், ஆதித் தமிழ் நாட்டிலேயே வழங்கிவந்தவை யென்பது புலப்படுகிறது. இசைத் தமிழைப் பற்றிய முழு விவர நூல்கள் பல அழிந்துவிட்ட போதிலும், அவைகளின் முக்கிய அம்சங்கள், பெயர்கள், நூலாசிரியர்கள் முதலிய விவரங்களை மறவாமலிருந்த தமிழ்ப் புலவர்களிடமிருந்து கிடைத்தவைகளை ஆதாரமாகக் கொண்டு இப் புத்தகம் தயாரிக்கப்பட்டிருக்கிறது.

இத்தகைய ஆராய்ச்சிகளைப் பரிகாசமாய்க் கருதும் பெரும்பான்மையான சங்கீத கோஷ்டியினருக்கு விலக்காக, ஆபிரகாம் பண்டிதரும் அவர் குடும்பத்தாரும் சங்கீத ஆராய்ச்சியை வாழ்க்கை லட்சியமாகக் கொண்டு அரும் பெரும் நூல்களியற்றியிருப்பது ஒருபுறமிருக்க, காலஞ்சென்ற பிரபல சங்கீத வித்வான் காயக சிகாமணி முத்தையா பாகவதர் அவர்கள் இத்தகைய சங்கீத ஆராய்ச்சியில் காட்டிய சிரத்தையை இப் புத்தகத்திலிருந்து தெரிந்துகொள்ளலாம்.

சங்கீத சாஸ்திர ஆராய்ச்சியாளருக்கு இப் புத்தகம் இன்றியமையாதது. தமது பாடாந்தரமும், தாம் மேடையில் பாடுவதும் தான் சங்கீதம், மற்றதெல்லாம் அசங்கீதம் என்று சொல்லிக் கொண்டு, சாஸ்திர நுட்ப ஆராய்ச்சிகளை ஏளனம் செய்து வரும் சில வித்வான்களுக்கு, தாம் கற்றது கைம்மண்ணளவு, கற்க வேண்டியது உலகளவு என்ற படிப்பினையைக் கொடுக்கும். மேடைமேல் கேட்கும் சங்கீதத்தைத் தவிர அறிய வேண்டியது எதுவுமில்லை என்று ரஸிகர்களும் அற்ப திருப்தியுடனிருந்து விடாமல் கலையின் நுட்பமறிந்து மதிப்பிட்டு அனுபவிக்க அதிகப் பயன்படும். புத்தகத்தில் காணும் சில முடிவுகளைப்பற்றி அபிப்பிராய பேதமிருக்கலாம். ஆனால் ஆராய்ச்சிக்குக் காட்டியிருக்கும் வழி அரியது. மொத்தத்தில் சில தமிழர்கள் தம்மைத் தாமே இழிவு செய்து கொள்ளும் மனப்பான்மையை இந்தப் புத்தகம் போக்கும். தமிழகமே கலையகம் என்பதும் புலப்படும். எனவே கலையுலகில் இப்புத்தகம் எல்லோர் கையிலும் இருக்க வேண்டியதோர் பொக்கிஷமாகும்.




## பெரும்பாடு!

"ஏண்டா முனியா, ஏன் முகத்தைத் தூக்கிக் கொண்டிருக்கிறாய்?"

"ஆமாங்கோ, யசமான். இந்தப் பாழும் மழை எப்பத்தான் ஓயுங்களோ?"

"ஏண்டா, மழை உன்னை என்னடா பண்ணுகிறது?"

"என்னுங்கோ, இதனால் தோட்டத்துக்குத் தண்ணி வாத்த முடியலிங்களே?"

—எஸ். ஆர். சங்கரன்.



## எல்லாம் ஒன்றே!

தகப்பனார்:—ஏண்டா பள்ளிக்கூடம் பாடங்களைப் படிக்காமல் இப்படி விளையாடிக் கொண்டிருக்கிறாய்?

பையன்:—நீதான் எதிராத்து மாமாவிடம் நேத்து சொல்லிண்டு இருந்தாயே 'இந்தக் காலத்திலே படிச்சவனும் படிக்காதவனும் ஒன்னுதான்னு!'

—சு. தங்கம்.



## சபாஷ்!

ஒரு சமயம் துப்பறியும் போலீஸ்காரன் ஒருவன் மூன்று கோழிப் பண்ணைகளைச் சோதனையிட்டான்.

போலீஸ்காரன் (முதல் பண்ணை முதலாளியிடம்):—நீர் உமது கோழிகளுக்கு என்ன உணவு போடுகிறீர்?

முதலாவது முதலாளி:—நான் கோழிகளுக்கு அரிசி போடுகிறேன்.

போலீஸ்காரன்:—அரிசி பங்கீடு செய்யப்பட்டிருக்கும் பொருளாகையால் அதை நீங்கள் கோழிக்குப் போடுவது சட்டப்படி குற்றமாகும். ஆகையால் உம்மைக் கைது செய்கிறோம்!

போலீஸ்காரன், பிறகு இரண்டாவது முதலாளியையும் இதே கேள்வியைக் கேட்க, அவர் 'கோதுமை' என்று பதில் அளித்தார்.

போலீஸ்காரன்:—கோழிக்குக் கோதுமை கொடுப்பதும் குற்றம்தான். உம்மையும் கைது செய்கிறேன்.

மூன்றாவது முதலாளி:—நான் கோழிகளுக்குக் காசை கொடுத்து விடுவேன். அவைகள் தாமாகவே தங்களுக்குப் பிடித்தவைகளை வாங்கித் தின்னும்.

—எம். ஏ. கிருஷ்ணமூர்த்தி.



## நல்ல யோசனை!

"ஏன் உமது பையனை அப்படி அடிக்கிறீர்?"

"நாளைக்குப் பள்ளிக்கூடத்தில் பரீக்ஷை 'ரிஸல்ட்டு' சொல்லப் போகிறார்களாம். ஆனால் இன்றிரவே நான் வெளியூர் செல்லப் போகிறேன்."

—செல்லம்மாள்.

## தாண்டிப்போனால்!

ஒருவர் பங்களா ஒன்றில் நுழைந்து, வேலைக்காரனைப் பார்த்து "உன் எஜமான் எங்கிருக்கிறார்?" என்று கேட்டார்.

வேலையாள்:—நேரே போங்கள். அங்கே 'யாரும் அனுமதிக்கப்பட மாட்டார்கள்' என்ற போர்டு தொங்கும். அதைத் தாண்டிப் போனால், 'அத்துமீறி வருபவர்கள் போலீஸார் வசம் ஒப்புவிக்கப்படுவார்கள்' என்று போட்டிருக்கும். அதையும் தாண்டிப்போனால் 'போகாதே' என்று போட்டிருக்கும். அங்கே நின்று கொண்டு இரைந்து "ஸார்!" என்று கூப்பிட்டீர்களானால் எஜமான் வந்து விடுவார்.

—ஆர். டி. கிருஷ்ணசாமி.



## நல்ல வேளை!

ஒருவர்:—இந்தப் பெரிய ரயில் விபத்தில் உயிர் தப்பியவர் நீர் ஒருவர் தானாக்கும். எப்படி நீர் மட்டும் தப்ப முடிந்தது?

மற்றவர்:—அதுவா? கேளுங்கள்! ரயில் தவறிவிட்டது.

—ச. நாயப்பன்.



## அணாவும் டிக்கட்டும்!

ஒருவர் பிளாட்பாரம் டிக்கட் கிடைக்கும் மிஷினில் ஒரு அணாவைப் போட்டுக் கைப்பிடியைப் பிடித்து இழுத்ததில், ஒரு டிக்கட்டும் பத்து அணாக்களும் வந்து விழுந்தன. அவருக்கு ஆச்சரியமாக இருந்தது. உடனே ஸ்டேஷன் மாஸ்டரிடம் போய் "ஸார்! இந்த டிக்கட் மிஷின் இருக்கு பாருங்கோ..." என்று ஆரம்பித்தார்.

ஸ்டேஷன் மாஸ்டர்:—"சரிதானய்யா! இந்தாரும் ஒரு அணா. அது தான் கெட்டுப்போய் இருக்கிறதே" என்று சொல்லி விட்டு அவசரமாக நகர்ந்தார்!

—எச். குருமூர்த்தி.



## பெட்டியில் இல்லையே!

நீதிபதி (திருடனைப் பார்த்து):—ஏய்! நீ பக்கத்து வீட்டுப் பணப்பெட்டியைத் திருடியதாக உன் மீது வழக்கு வந்திருக்கிறது. இதற்கு என்ன சொல்லுகிறாய்?

திருடன்:—ஒன்றும் இல்லையே!



நீதிபதி:—என்னடா, ஒன்று மில்லை என்கிறாய்?

திருடன்:—பெட்டியில் இரண்டு வேஷ்டியைத் தவிரப் பணம் ஒன்றும் இல்லிங்களே சாமி!

—ஆ. ஜானகி அம்மாள்.

# ஆட்டக்காரர் விரும்புவது

ஒரே நேரத்தில் கையும் கண்ணும் குறிதவறாமல் இருக்கவும், பூராப் பொருத்தமான வலிவுடனிருக்கவும் வேண்டிய சமயங்களிலெல்லாம் முதலில் விரும்பப்படுவது டீ தான்.

ஒவ்வொரு விளையாட்டிலும் தலைசிறந்து நிற்போர் இவ்வுண்மையை அறிந்து டீ அருந்துவதையே பிரதானமாகக் கொண்டது தற்செயலாக ஏற்பட்டதல்ல. முதலாவதாக தாகத்தைப் பூரணமாக தணிக்கவல்லது டீ. மேலும் குறித்த வேலையில் ஒருமுகமாக கவனம் செலுத்த உதவுவதால் ஊக்கத்தை அதிகரிக்கிறது. கடைசியாக எக்கெடுதியும் செய்யாதது.



"கடினமான ஆட்டத்துக்குப் பிறகு முதல்தரமானது"
ஹஸாரே

"கிரிக்கெட் ஆட்டத்தில் புகழ்பெற விரும்புவோர் அதிகமாக டீ அருந்தவேண்டும்"
முஷ்டாக் அலி



"ஆடுவதற்கு முன்பும், ஆடிய பிறகும் ஒருகப் டீ அருந்துவதால் நன்மையுண்டு"
ஸர்தார் ஹர்பாயல் ஸிங்



"டீயைத்தவிர வேறு எந்த பானத்தையும் சிபாரிசு செய்ய முடியவில்லை"
தாஜ் முகமத்

"என் கட்சியைப் போலவே டீயையும் விரும்புகிறேன்"
அனில் டே.



"ஆட்டங்களுக்கிடையில் ஒரு கப் டீ அருந்தினால் எத்தகைய புத்துணர்ச்சி"
கேலன் முகமத்

"விறுவிறுப்பான டென்னிஸ் விளையாட்டின் டீ தான் எனக்குப் பிரியமான பானம்"
இப்திகார் அகமது






"தண்ணீரை விட்டு வந்தவுடன் ஒரு கப் டீ எப்பொழுதும் அருந்துகிறேன்"
பி. கே. கோஷ்



"பலம் குறையாமல் இருக்க உதவும் சிறந்த பானம். எந்த ஆட்டக்காரருக்கும் இன்றியமையாதது"
ஜானகி தாஸ்



இந்தியன் டீ மார்க்கெட் எக்ஸ்பான்ஷன் போர்டாரால் வெளியிடப்பட்டது
IK 259 ATM



# இந்தியத் தேயிலையில்

# மிகச்சிறந்தது

மிக நேர்த்தியான மணமும், நல்ல நிறமும், குறைந்த விலையும் உள்ள லிப்டன்ஸ் வெள்ளை லேபில் தேயிலைகள் இதர தேயிலைகளை விட சிறந்தவை.




# லிப்டன்ஸ்

## வெள்ளை லேபில்

**நேர்த்தியான இந்திய தேயிலை**

LTK

# கைகேயி சுமித்திரையானது

சி. ஆர். ராமஸ்வாமி





வக்கீல் தாத்தாச்சாரி மதுரையிலும் சுற்றிலுமுள்ள ஜில்லாக்களிலும் கிரிமினல் வழக்குகளை நடத்துவதில் நிகரற்றவரென்று பெயர் போனவர்.

ஒரு நாள் அவர் ஒரு பெரிய கொலைக் கேஸ் நடத்தும் அவசரத்தில் சாப்பிட்டு விட்டுக் கோர்ட்டு உடுப்பு தரித்துக் கொண்டு வெற்றிலைப் பாக்கு போட்டுக் கொண்டே வந்த தபாலை அவசரமாய்ப் பார்வையிட்டுவிட்டு வண்டியிலேறினார்.

வெற்றிலைத் தட்டை உள்ளே எடுத்துப் போக வந்த அவருடைய மகன் கிருஷ்ணசாமி, கீழே ஒரு காகிதத் துண்டு விழுந்திருக்கக் கண்டு அதை மேஜைமேல் எடுத்து வைத்தான். வைக்கும் பொழுது அதில் பின்வருமாறு எழுதியிருப்பதை அவனால் படிக்காமலிருக்க முடியவில்லை.

> "எல்லாம் நிச்சயமாய் விட்டதாகவும், முகூர்த்தந்தான் நிர்மாணிக்க வேண்டுமென்று நீங்கள் எண்ணலாம். என் பெண்ணுக்கு உங்கள் பையன் இருக்க நாங்கள் வேறு வரன் தேடுவானேன்? சீமா."

"இது கடிதத்தின் கடைசித் தாள். யாரோ மடிசஞ்சி, ஏதோ கொடுத்து விட்டுத் தன் பெண்ணை என் தலையில் கட்டத் துணிந்திருக்கிறது. நான் அவருடைய அம்மாஞ்சியா? இவ்வளவு பெரிய வக்கீலாயிருந்தும், எனக்குக் கல்யாணம் செய்யுமுன் என் விருப்பத்தைக் கேட்பது அவசியமென்று என்னுடைய தகப்பனாருக்குத் தோன்றவில்லை" என்று கிருஷ்ணசாமி முன் பின் தெரியாத ஒருவர் மேலும் தகப்பனார் மேலும் கோபங் கொண்டான்.

"மனிதன் இல்வாழ்க்கையில் அனுபவிக்கும் சுகங்களில் எல்லாவற்றிலும் மேலானது மனைவியிடமிருந்து கிடைக்கும் துணை நலன். அதைப் பெறாமல் போனால் கலியாணம் பண்ணிக் கொண்டவர் என்ன சுகத்தைக் காண்பார்கள்? மனைவிக்கும் அவன் பெற்றெடுக்கும் பிள்ளைகளுக்கும் கூலியாள்போல் உழைப்பதுதான்" என்று பொய்யா மொழிப் புலவர் சொல்லியது பொய்யாகுமா?

மனைமாட்சி யில்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை
எனைமாட்சித் தாயினு மில்

இந்த வாழ்க்கைத் துணை அன்று பார்த்த அவளிடத்தில் கிடைக்காமல் எனக்கு வேறு யாரிடத்தில் கிடைக்கப்போகிறது? உயிர் போனாலும் நான் வேறொருத்தியை வரிப்பேனா? அன்று என் மானத்தைக் காப்பாற்றினாளே, நான் டிக்கெட் பணத்திற்காகப் பையைத் தேடிக் கொண்டு, முன் வரிசையில் கண்டக்டர் டிக்கட்டில்லாமல் பஸ்ஸில் வந்தவனைக் கண்டபடி திட்டிக் கொண்டிருப்பதைக் கேட்டு, எனக்கும் அந்த மாதிரி ஏற்படுமோவென்று நடுங்கிக் கொண்டிருக்கையில், ஒரு வெள்ளி ரூபாயை எனக்குத் தெரிகிறமாதிரி என்னுடைய ஜோபியில் போட்டுவிட்டு பஸ்ஸிலிருந்து இறங்கி முகஜாடையால் எனக்குத் தெரியப்படுத்தி, புன்னகை புரிந்து, எனது உள்ளத்தைக் கவர்ந்து சென்றதை நான் மறக்கக் கூடுமா? என்றெல்லாம் சிந்தனை செய்து தன் தகப்பனார் தனக்கு நிச்சயித்த பெண்ணைத் தான் மணக்கப் போவதில்லையென்று மனத்தில் நிச்சயம் செய்து கொண்டான்.

* * *

தாத்தாச்சாரி அன்றிரவு கிருஷ்ணசாமியைப் பார்த்து, "உன்னை நான் சென்னையில் எனது நண்பன் சீனிவாச

ராகவனிடம் வேலையில் பழக அனுப்பலாமென்று தீர்மானித்திருக்கிறேன். இங்கே வக்கீல் தொழிலில் நாகரிகமற்ற போட்டி, மாஜிஸ்ட்ரேட்டுகளுக்குப் பணிந்து அவர்களுடைய தயவைச் சம்பாதிப்பது, கட்சிக்காரனிடம் பொய் சொல்லி வசப்படுத்தி வைப்பது, ஆகிய இந்த வேலைகளிலேயே நமது புத்தி யெல்லாம் தேய்ந்து விடுகிறது. இன்று என்னுடைய கட்சிக்காரன் மரண தண்டனை யடைந்தது அதற்குத் தகுந்த திருஷ்டாந்தம். இந்தக் காலத்து ஜட்ஜிகள் பெரிய வக்கீல் சொல்லுவதை நிராகரித்து விரோதமாகத் தீர்ப்புத் தந்து விடுவதில் ஒரு வித திருப்தி அடைகிறார்கள். ஹைகோர்ட்டில் நிலைமை இந்த மாதிரி மோசமாயிராதென்று நினைக்கிறேன். என்கூடப் படித்தவர்கள் சர்க்கார் பிராசிக்யூடர், ஹைகோர்ட் ஜட்ஜ், அட்வகேட் ஜனரலாகக்கூட ஆய் விட்டார்கள். புத்திசாலிகள் அங்கே எளிதில் முன்னுக்கு வரலாம். சீனிவாச ராகவன்கூட, ஹைகோர்ட் ஜட்ஜாக வரப்போகிறவர்களுடைய ஜாபிதாவில் இருக்கிறார் என்ற பலமான வதந்தி பரவியிருக்கிறது'' என்றார்.

கிருஷ்ணசாமிக்குச் சந்தோஷம் தாங்கவில்லை. கும்பிடப் போன தெய்வம் குறுக்கே வந்தது போல், தான் சென்னைக்குப் போயிருப்பது, அன்று பார்த்த அவளைத் தேடுவதற்குச் சௌகரியமாயிருக்குமென்பதை உணர்ந்து, வெளிக்குத் தகப்பனாரை விட்டுப் போக இஷ்டமில்லாதவன் போல், "அவர் மட்டும் என்ன கிழித்து விட்டார்? நீங்கள் அனுப்பின அப்பீல்களை யெல்லாம் அவர் ஜயித்துக் கொடுத்து விட்டாரா? உங்கள் இஷ்டம்" என்று சொன்னான்.

•  •  •

இந்த சம்பாஷணை கடந்து ஒரு வாரத்துக்கெல்லாம் கிருஷ்ணசாமி சென்னையில் ஒய். எம். சி. ஏ. வில் ஒரு அறையை வாடகைக்கு எடுத்துக் கொண்டு சீனிவாச ராகவனிடம் 'அப்ரெண்டிஸ்' ஆக அமர்ந்தான். சீனிவாச ராகவன் தம் வீட்டிலேயே இருக்கும்படி அவன் தகப்பனார் எழுதினதாகச் சொன்னார். கிருஷ்ணசாமி அது மரியாதைக் குறைவென்று தகப்பனாருக்கு எழுதிவிட்டுத் தன் அபிமான தேவதையைத் தேடும் முயற்சிகளுக்கு ஒய். எம். சி. ஏ. விலிருப்பது அனுகூலமாயிருக்குமென்று 'சீனியர்' வீட்டிலிருக்க மறுத்து விட்டான்.

சென்னைமாநகரில் கிருஷ்ணசாமி அந்தப் பெண்ணைத் தேடியது போலீஸ்காரர்கள் புரட்சிக்காரர்களைத் தேடுவது போல் இருந்தது. பாதைகள் சேருமிடத்தில் நின்று பார்த்தான். சினிமா தியேட்டர்களில் ஒவ்வொன்றாய் நுழைந்து, மூன் பார்த்த படமென்று கூடச் சலிப்புக்கொள்ளாமல், கடைசி வரையில் இருந்து பார்த்தான். கடற்கரை, கண்காட்சிச் சாலைகள், மூர் மார்க்கெட்டு, சைனா பஜார், பெரிய ஷாப்புகள் எல்லாவற்றிற்கும் சென்று சென்று அலைந்து பார்த்தான். எங்கேயும் அவளைக் காணவில்லை. அனுமார்



லங்கையில் சீதையைத் தேடினமாதிரி மூன்று அங்குல இடம் விடாமல் தேடிப் பார்த்து ஒரு வேளை இப்போது அவள் சென்னையில் இல்லையோ? வேறு ஊருக்குச் சென்றிருப்பாளோ? என்று ஏங்கினான். திடீரென்று அனுமானுக்குத் தோன்றியது போலவே அவனுக்கும் ஒரு யுக்தி தோன்றிற்று. எதிரி விமானங்களை வானலை யந்திரம் ராடாரால் இடமறிவது போல் மனோ அலைகளால்தான் அவளிருக்குமிடத்தை அறிய முடியும். தான் அவளைத் தேடுவதுபோல் அவளும் தன்னைத் தேடிக்கொண்டுதா னிருப்பாள் என்று எண்ணி உடனே தனக்குத் தெரிந்த நண்பனொருவன் நடத்தி வரும் பத்திரிகையில் ஓர் அறிக்கையை அச்சிடச் செய்தான்.

"அன்று பஸ்ஸில் வாங்கினதைத் திருப்பித்தர விரும்புகிறேன்" என்று மறை பொருளாகப் பிரசுரித்தான்.

அடுத்த நாள் பத்திரிகாசிரியர் கிருஷ்ணசாமியை வரவழைத்து "நல்ல வம்பில் மாட்டி வைத்தாய். இந்தா உனக்குப் பதில்" என்று சுமார் இரு நூறு கடிதங்களை அவனிடத்தில் தந்து, "எனக்கு இவற்றைப் படிக்க அவகாசமில்லை. நீயே படித்துப் பார்" என்று சொல்லிக் கடிதக் கத்தையை அவனிடத்தில் தந்தார். புத்தகம், கடிகாரம், பேனா, கத்தி, குடை முதலிய பல பொருள்களைப் பற்றிப் பலவிதமான விடையும் மனோபாவமும் கொண்ட கடிதங்களைப் படித்தான். ஆனால் வெள்ளி ரூபாயைப் பற்றி யாரும் பிரஸ்தாபிக்கவில்லை.

தகப்பனாரிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. அதில் "உன் சீனியர், நீ ஆபீசுக்குச் சரியாய் வருவதில்லை. வந்தாலும் கேஸ்களைப் படித்துக் குறிப்புகள் எழுதி வைப்பதில்லை, எழுதினாலும் கவனத்துடன் ஆராய்ந்து எழுதுவதில்லை என்று எனக்கு எழுதியிருக்கிறார். நல்ல சந்தர்ப்பத்தை ஏன் வீணாக்கிக் கொள்கிறாய்? உன்னிடத்தில் நான் இதை எதிர்பார்க்கவில்லை" என்று வருத்தத்துடன் எழுதியிருந்தார்.

ஸ்ரீனிவாசராகவன் தம் ஆபீஸ் அறையில் கிருஷ்ணசாமியிடம் அவர் மனைவி எழுதிக் கொடுத்த ஜாபிதாவைக் கையில் கொடுத்து "தயவு செய்து இந்தச் சாமான்களை வாங்கிவர வேண்டும். இங்கே காலையில் கொண்டு வந்து கொடுத்தால் நான் சாயந்திரம் எடுத்துப் போகிறேன்" என்று சொல்லுவார். கிருஷ்ணசாமி அவர் தன் தகப்பனாரின் சிநேகிதர் என்ற தாக்ஷண்யத்திற்காக மறுக்கவில்லை. ஆனால் அந்தப் பெண்ணைத் தேடும் முயற்சிகள் வீணானதும், தகப்பனாரின் கடிதமும் அவனை வருத்த, இந்தச் சிறிய கைங்கரியங்கள் அவனுக்குப் பெரிய தொல்லைகளாகத் தோன்றின.

"உங்கள் நண்பர் என்னைத் தம் மனைவியின் வேலைக்காரனாக எண்ணியிருக்கிறார். வீட்டுச் சாமான்களை வாங்கத்தான்



என்னை அதிகமாக உபயோகித்துக் கொள்ளுகிறார். கைகேயிகளிடம் அகப் பட்டுத் திண்டாடும் வக்கீல்களைவிடப் புஸ் தகத்தை மேலே விட்டெறியும் ஸீனியர் களே மேல். மதுரைக்கே திரும்பிவிடத் தீர்மானித்து விட்டேன்'' என்று தகப் பனுருக்கு எழுதிவிட்டான். அதற்கு அவர் பின்வருமாறு பதில் எழுதினர்.

அன்புள்ள கிட்டு,

சீனிவாசராகவனுடைய முதல் மனைவியின் மகனும் மகளும் காசியில் வசிக்கிறார்கள். அவர்களுடைய மாமாவுக்கு அங்கே வேலை; அவருடன் இருக்கிறார்கள். வரதராஜன் எஞ்சினியரிங் படிப்பை முடித்துவிட்டு வேலை தேடிக் கொண்டிருப்பான். பெண் லலிதா பி.ஏ. பரீட்சைக்கு எழுதியிருப்பாள். அவளை உனக்கு விவாகம் செய்து முடிப்பதாக நாங்கள் முன்னமேயே நிச்சயம் செய்திருக் கிறோம். அவளுடைய பரீட்சை முடியட்டு மென்று காத்திருந்தோம். கிறிஸ்மஸ் விடு முறைக்கு அங்கே வருவாள். பார்த்துவிட்டு வா. உனக்கு வரப் போகிற மாமனுருடன் நெருக்கமா யிருப்பது நல்லதுதானே? அவர் வீட்டுக்குக் காய்கறி வாங்கித் தந்தால் அதை எடுத்து வருவது உனக்கு அவமரியாதையாகி விடாது. அப்படிச் செய்வதற்கு வருந்துவது தான் அவமரியாதை. கைகேயியைப் பற்றிச் சரியாகத் தெரிந்துகொள்ள ஒருமுறை வால் மீகி ராமாயணத்தைப் படி.

இப்படிக்கு,

அப்பா.

இதற்குக் கிருஷ்ணசாமி கோபத்துடன் பதில் எழுதலாமென்று நினைத்தான். பிறகு பேசாமல் மதுரைக்குத் திரும்பி விட்டு, தகப்பனர் கோபித்தால் ஊரை விட்டு எங்கேயாவது போய் ஒரு வேலை யில் சேர்ந்து விடுவதென்று தீர்மா னித்தான்.

* * *

"ஏன் அழுகிறாய்? சித்தியை விட்டுப் பிரிந்ததனாலா? உனக்குக் கலியாணம் ஏற்பாடா யிருக்கிறது. உன்னை அவர் ஆபிஸில் வேலை பார்த்துவரும் ஒரு அப்ரென்டிசுக்கே கொடுக் கப் போகிறார். அவர் மதுரை ஆசாமி. ஊருக்குப் போகு முன் உன்னைப் பார்த்தால் நல்ல தென்று உன்னை வண்டியி லேற்றி ஊருக்கு அனுப்பத் தகப்பனாரிடமிருந்து உத்தரவு வந்திருக் கிறது'' என்றான் அண்ணன்.

"நான் சென்னையில் பஸ்ஸில் போய்க் கொண்டிருக்கையில் ஒருவர் டிக்கட்டுக் குப் பணம் கொடுக்கப் பையைத் தேடி அது அகப்படாமல் விழித்துக் கொண் டிருந்தார். அதைக் கண்டு நான் ஒரு ரூபாயை அவருக்குத் தெரியும்படி கோட் பையில் போட்டு விட்டு நான் பஸ் நின்ற தும் இறங்கி விட்டேன். அந்த ரூபாயை அடைய வழி தெரியாமல் அழுகிறேன்'' என்றாள் தங்கை.

வரதராஜன் :— ஒரு ரூபாய்க்காகவா இந்த சோகம்? அவருக்கு எவ்வளவு வயது இருக்கும்?

லலிதா :—இருபத்திரண்டு இருக்கும்.

வரதராஜன் :— விஷயம் கொஞ்சம் புரிந்தது. கருப்பா, சிவப்பா?

லலிதா :—சிவப்பென்றுதான் சொல்ல வேண்டும்.

வரதராஜன் :—கிராப்பா, குடுமியா?

லலிதா :—குடுமி, கடுக்கன், என்னைவிட நாலங்குலம் உயரம்; மூக்குக் கண்ணாடி யில்லை. அழகென்று சொல்லலாம்.

வரதராஜன் :— எல்லாம் சௌகரிய மாய்த்தானிருக்கிறது. குடுமி ஒரு விசே ஷம். ஆனால் எனக்கு ஒரு சந்தேகம். இந்த அடையாளங்களை வைத்துக் கொண்டு ஆளைக் கண்டு பிடிப்பது கஷ் டம். ஆனால் எதற்கும் மனமிருந்தால் வழி தோன்றும். ரூபாயை இழந்ததோடு உன் உள்ளத்தையும் பறிகொடுத்து விட்டாயோ?

லலிதா :—அது சம்பந்தமற்ற கேள்வி. அவரைப். பார்த்து ரூபாயைத் திருப்பிப் பெற ஒரு வழி சொல்லு.

வரதராஜன் :— கையிலென்ன மூடி வைத்திருக்கிறாய்?

லலிதா :— அதை நான் சொல்ல முடியாது?

வரதராஜன் :— தெரிகிறது. நீ கையைக் கெட்டியாய் மூடினதும் வெங்காய வாடை அடிக்கிறது. இது



தான் உன் கண்ணீருக்குக் காரணமோ, அல்லது சாதனமோ? உனக்கு ரூபாயைப் பெற எவ்வளவு ஆவலா யிருக்கிறதோ அந்த ரூபாயைத் திருப்பிக் கொடுக்க அவனுக்கும் ஆவலாயிருக்கும். அதற்கு ஏதாவது தந்திரம் அவனே அவசியம் செய்வான், பொறுமை யுடனிரு.

இந்த சம்பாஷணை நடந்த சில தினங்களுக்குப் பின் வரதராஜன் "உஷா" பத்திரிகைப் பிரதி யொன்றைக் கொண்டு வந்து தந்து அதன் அறிக்கைகளி லொன்றைத் தங்கைக்குக் காண்பித்தான். தங்கையின் முகம் மலர்ந்தது. "நீ பதில் என்று தலைப்பு கொடுத்துத் தேதியையும், வேளையையும் குறித்து ஸ்டேஷனில் பார்க்கச் சொல்லி இதே பத்திரிகையில் அறிக்கை விடு" என்றாள்.

தமையன், அப்படியே ஆகட்டு மென்றான்.

* * *

நான் அறிக்கை விட்டது முதல் கிருஷ்ணசாமி தினம் விடாமல் "உஷா" பத்திரிகையை வாங்கிப் படித்து வந்தான். பதில் வந்ததைக் கண்டு சொல்லொணு மகிழ்ச்சி யடைந்தான். சில நாட்கள் கழிந்ததும் அவனுடைய சீனியர் அவனைப் பார்த்து, "எனக்கு ஒரு காரியம் ஆக வேண்டும். நீர் நாளைக்குக் காலை ஸ்டேஷனுக்குப் போய் 9 மணி ரயிலில் என் பெண் லலிதாவை அழைத்து வர வேண்டும். இரண்டாவது வகுப்புப் பெண்கள் வண்டியில் வருவாள், எனக்கு அவகாசமில்லை" என்றார்.

கிருஷ்ணசாமி 'அவள்' அறிக்கைப் பிரகாரம் அதே சமயத்தில் தானும் ஸ்டேஷனுக்குப் போகவேண்டி யிருந்ததால் சந்தோஷமாய் ஒப்புக்கொண்டான். லலிதாவை எப்படி அடையாளம் கண்டு பிடிப்பது என்று கேட்டான். பெட்டியில் அவள் பேர் இருக்கும் என்று சீனிவாச ராகவன் சொன்னார்.

ரயில் காலத்துக்கு முன் வந்துவிட்டால் என்ன செய்வதென்று கிருஷ்ணசாமி காலை ஏழு மணிக்கே ஸ்டேஷனுக்குப் போனான். ரயில் சரியாய் 9 மணிக்குப் பிளாட்பாரத்திற்கு வந்தது. கிருஷ்ணசாமி என்ஜினிலிருந்து கார்ட் வண்டி வரையில் பார்த்து விடுவதென்று தீர்மானித்து ஒவ்வொரு வண்டியாய்ப் பார்த்து வருகையில் இரண்டாவது வகுப்பு பெண்கள் வண்டியிலிருந்து ஓர் பெண் இறங்கிக் கூலியாட்களை எதிர்பார்த்து நின்றாள். கூட்டம் அதிகமா யிருந்ததால் கூலியாட்கள் சுலபமாய்க் கிடைக்கவில்லை. கிருஷ்ணசாமி அவளைக் கண்டதும் வெகு நாள் பழகினவளைப் பார்த்துப் பேசும் தோரணையில் "கூலி கிடைக்க வில்லையா? நானே எடுத்துப் போகிறேன். ஒரு பெட்டியும் படுக்கையும்தானே!" என்று அவற்றை வண்டியிலிருந்து இறக்கி ஒரு கையில் பெட்டியையும் மற்றொரு கையில் படுக்கையையும் பழகின கூலியாளைப் போல எடுத்துக் கொண்டு அவள் பின் தொடர, வாடகை மோட்டார்கள் நிற்குமிடம் நோக்கிச் சென்றான். டாக்ஸியில் சாமானை வைத்து விட்டு அவள் விலாசத்தைக் கேட்டுத் தெரிந்து கொள்ளலா மென்று துணிந்து கேட்பதற்குள் அவள் டிரைவரைப் பார்த்துத் தான் போக வேண்டிய இடத்தைச் சொன்னாள். கிருஷ்ணசாமி டாக்ஸிக்குப் பின்புறம் போய் நம்பரைப் பார்த்துக் கொண்டான். பிறகு டாக்ஸிக்காரனைக் கண்டு எந்த வீட்டில் இறங்கினாள் என்று தெரிந்து கொள்ளலாம் என்று எண்ணினான். அதற்குப் பின்புதான் கிருஷ்ணசாமிக்குச் சீனியரின் பெண் லலிதாவைப் பற்றி ஞாபகம் வந்தது. மறுபடியும் பிளாட்பாரத்திற்கு வந்தான். யாரையும் காணவில்லை. ஆபீசிற்குச் சென்று சீனியரிடம் "உங்கள் பெண் வரவில்லை" என்றான்.

சீனிவாசராகவன் "வந்து விட்டாளே! நீங்கள் பார்க்கவில்லை" என்றார். கிருஷ்ணசாமிக்கு வெட்கம் பொறுக்க முடியவில்லை.

* * *

அன்று சாயந்திரம் கிருஷ்ணசாமி சீனியர் பங்களாவிற்குப் போனான். முட்டாள் பட்டம் பெற்றவன் எப்படிப்



போவானேன் அவ்வாறே போனான். வாசலில் நின்று கொண்டிருந்த சீனிவாசராகவனின் மனைவி "காப்பி சாப்பிட்டு விட்டுப் போங்கள்" என்று அழைத்தாள். கிருஷ்ணசாமி, "உங்கள் பெண்ணை அழைத்து வர ஸ்டேஷனுக்கு சென்றிருந்தேன். நான் கூட்டத்தில் ஏமாந்து போனேன். அவளைப் பார்த்துக் கண்டு பிடிக்க முடியவில்லை. சவுகரியமாக வந்து சேர்ந்தாளா?" என்று கேட்டான்.

"அவள் டாக்ஸி வைத்துக் கொண்டு வந்து விட்டாள்" என்று சொல்லி "லலிதா! ஒரு கப் காப்பி கொண்டு வா, அவரை ஸ்டேஷனில் பார்க்கவில்லையா?" என்றாள். லலிதா கூடத்திலிருந்து "யாருக்கம்மா?" என்று கேட்டுக்கொண்டே வாசலுக்கு வந்தாள். லலிதா சிரித்தது கிருஷ்ணசாமிக்கு ஜலதரங்கத்தைக் கேட்பதுபோலிருந்தது.

* * *

சீனிவாசராகவன் அன்று முதல் கிருஷ்ணசாமி வேலையில் காட்டின ஊக்கத்தையும் பிரயாசையையும் கண்டு ஆச்சரியப்பட்டார். தாத்தாச்சாரியாருக்குப் பின் வருமாறு கடிதம் எழுதினர்.

"உங்கள் பிள்ளையைப் பற்றி நான் தப்பபிப்ராயம் கொண்டிருந்தேன். சில சமயம் என் பெண்ணை அவனுக்குக் கொடுக்கச் சம்மதித்ததற்கு வருந்தினது முண்டு. இப்பொழுது என் அபிப்பிராயம் முழுதும் மாறிவிட்டது. உங்கள் மகன் என் பெண்ணுக்குக் கிடைப்பது பெரிய அதிர்ஷ்டமென்றே நினைக்கிறேன். சமீபத்தில் ஒரு முகூர்த்தம் நிச்சயம் செய்து விடுங்கள்.

சீமா."

முன்பு கைகேசியாகத் தோன்றின மாமியார் கிருஷ்ணசாமிக்கு இப்பொழுது சுமித்திரையாகத் தோன்றினாள்!

* * *

"அதெப்படி உனக்கு அவ்வளவு தைரியம் வந்தது. முந்தி பிந்தி அறியாத ஒரு புருஷன் ஜேபியில் ரூபாயைப் போட?"

"ஆண்பிள்ளைகளுக்குள்ள தைரியம் பெண்பிள்ளைகளுக்கும் ஓரொரு சமயம் வந்து விடும். மேலும் நீங்கள் எங்கள் அப்பாவின் சிநேகிதர் மகன் என்பது எனக்குத் தெரிந்திருந்தது. நீங்கள் தான் என்னை அறியவில்லை" என்றாள் லலிதா.

---

## அது வேறேயா?



# பிரசங்க மேடையில்...

ஸோமாஸ்

## பிரிவுபசாரம்

ஒரு பெரிய உத்தியோகஸ்தருக்கு மாற்றலாகி வடநாட்டுக்குப் போகவேண்டி யிருந்தது. அவருக்கு அவ்வூர்ப் பிரமுகர்களின் சார்பாக ஒரு பிரிவு உபசாரக் கூட்டம் நடைபெற்றது.

அம் மாபெரும் கூட்டத்தில் மேற்படி உத்தியோகஸ்தரின் சேவையையும் திறமையையும் பாராட்டிப் பேசும் கைங்கரியத்தை ஏற்றுக்கொண்ட அன்பர் ஒருவர் பின்வருமாறு பேசினார் :

“ திவான்பகதூர் தில்லைநாயகம் பிள்ளையவர்கள் இவ்வூரிலேயே பிறந்தார்; இவ்வூரிலேயே கல்வி பயின்றார்; இவ்வூரிலேயே உத்தியோகம் பெற்று அதைத் திறமையுடன் நிர்வகித்தார். இதே ஊரில்தான் அவருக்குக் கல்யாணமும் நடந்தது. ஆனால், அந்தோ ! அவர் இவ்வூரிலேயே ......” என்றதும் அந்த அன்பருக்குத் துக்கம் தொண்டையை அடைத்தது.

“ இவ்வூரிலேயே அவர் இறப்பதற்குக் கொடுத்து வைக்க வில்லையோ !” என்றார் ஒருவர். எல்லோரும் ‘கொல்’லென்று சிரித்தனர்.

## பாவம், தலைவர் !

ஒரு சமயம் புலவர் பெருமான் ஒருவர் சொற்பொழிவு ஆற்றினார். அவர் செய்த சொற்பொழிவில் விசேஷம் என்னவென்றால் எடுத்ததற்கெல்லாம் திருக்குறளிலிருந்தும் நாலடியாரிலிருந்தும் மேற்கோள்களை வாரி வாரி வீசியதுதான்.

அவர் தம் பிரசங்கத்தில் கையாண்ட மேற்கோள்களைவிட, அந்தப் பிரசங்கத்தை நிறுத்துவதற்குச் சபையோர் கையாண்ட சாதனங்கள் அதிகமாயிருந்தன.

இந்தக் கோடியிலிருந்து அந்தக் கோடிக்குக் கேட்கும்படியாக ஒரு அன்பர் கொட்டாவி விட்டார். ஒரு அன்பர் மிகவும் அலுப்புடன் மணி கேட்டதற்கு இன்னொரு அன்பர் பொறுமை யிழந்து, “ மணி என்னத்துக்காகக் கேட்கிறீர்கள் ? ‘ காலண்டரைப் பாருங்கள் !” என்றார். கடைசியாக ஒருவர் பிரசங்கியைப் பார்த்து, “ வள்ளுவரும், நாலடியாரும் சொல்வதைத்தான் புத்தகங்களில் படித்துக் கொள்ளலாமே ! நீங்கள் என்ன சொல்கிறீர்கள் என்று சொல்லக் கூடாதா ?” என்றார். பிரசங்கம் உடனே நின்று விட்டது.

## அவர் யார் ?

நீளப் பிரசங்கம் பொதுவாக எல்லாருக்குமே வேதனை அளிப்பதுதான் என்றாலும், அடுத்தாற்போல் பேச எண்ணி யிருப்பவர்களுக்கு அது சித்திரவதை என்று சொல்லலாம். இவர்கள் எங்கே தங்களுக்கு அவகாசம் கிடைக்காமல் போய்விடுமோ என்று பிரசவ வேதனைப்பட்டுக் கொண்டே யிருப்பார்கள். நேரம் ஆகிவிட்டதென்றும், பிரசங்கத்தை முடிக்கச் சொல்ல வேண்டுமென்றும் அவர்கள் சபைத் தலைவரைத் தூண்டிக் கொண்டே யிருப்பார்கள். ஆனால், தலைவரோ சொல்லவும் முடியாமல் மெல்லவும் முடியாமல் தவித்துக் கொண்டிருப்பார்.

ஒரு பிரசங்கி தம் பிரசங்கத்தை முடித்த போது, கூட்டத்தில் ஒரே ஒரு நபர்தான் பாக்கி யிருப்பதைக் கண்டார். ஆனந்தம் தாங்கவில்லை அவருக்கு. அபரிமிதமான நன்றி யறிதலுடன், “ ஐயா, எல்லாரும் மரியாதை யில்லாமல் எழுந்து போயிருந்தும் தாங்கள் பொறுமையுடனிருந்து என் பிரசங்கத்தை முழுவதும் கேட்டதற்காக மிக்க வந்தனம் !” என்றார்.

“ தங்களுடைய நன்றி யறிதலுக்கு நான் எவ்வகையிலும் பாத்திர மல்லேன். ஏனெனில் தங்களுக்கு அடுத்தபடி பிரசங்கம் செய்யவேண்டியவன் நான். அதற்காகக் காத்திருந்தேன் !” என்று பதில் வந்தது.

## அவகாச மில்லை !

ஒரு பிரசங்கியார் “ பதிவிரதா மகாத்மியம் ” என்னும் விஷயத்தைப் பற்றிப் பேச ஆரம்பித்தார் :

“ நம் நாட்டில் பதிவிரதைகளின் மகிமையைப் பற்றி விளக்குவதற்கு எண்ணிறந்த கதைகளிருக்கின்றன. உதாரணமாக நளாயினியை எடுத்துக் கொள்வோம். அவள் கணவன் தான் ஆசை கொண்ட வேசி வீட்டுக்குப் போக வேண்டும் என்று கூறியதும் மனமுவந்து அவளே அவரை வேசி வீட்டில் விட்டு வரவில்லையா ? அந்தக் கதை முழுவதும் சொல்லுவதென்றால் அதை ஒரு தனிப் பிரசங்கமாக வைத்துக் கொள்ள வேண்டும். இப்போது அவகாசமில்லை.

சீதா தேவியின் பதிபக்தி யென்ன இலேசானதா ? அதைப்பற்றிக் கூறுவதா



குழந்தைகளுக்கு எவ்வளவோ



நூதன விளையாட்டுச் சாமான்கள்



வாங்கிக் கொடுத்தாலும்



-சாயா-



அவைகள் வைத்துக்கொண்டு விளையாடுவது. . .

பிருந்தால் ஒரு தனிப் பிரசங்கமே வைத்துச் சொல்ல வேண்டும். இப்போது விவரிப்பதற்கு அவகாசமில்லை!

இராவணன் மனைவி மண்டோதரியைப் போன்ற பதிவிரதை இல்லை யென்றே கூறலாம். அவளைப் பற்றிப் பேசுவதென்றால் ஒரு தனிப் பிரசங்கமே வைத்துச் சொல்ல வேண்டும்! இப்போது அவகாச மில்லை!"

இதேமாதிரி அவர் மூன்று மணி நேரத்துக்கு மேல் பேசியும், எந்த விஷயத்தைப் பற்றியுமே விரிவாகப் பேசுவதற்கு அவகாச மில்லாமலே போய்விட்டது!

## கடைசியில் ஒரு விஷயம்!

"கடைசியில் ஒரு விஷயம் குறிப்பிட விரும்புகிறேன். கற்புக்கரசிகள் பெய்யென்றால் மழை பெய்யும் என்று தமிழ் மறை கூறுகிறது. அதை நளாயினி சரித்திரத்தில் காணலாம். அவள் தன் பதிபக்தியின் மகிமையினால் பொழுது விடியாமலிருக்கச் செய்யவில்லையா?

கடைசியில் இன்னொரு விஷயம். அனசூயா தேவி திரிமூர்த்திகளையும் ஒரு மூர்த்தியாக்கிவிட வில்லையா?

கடைசியில் இன்னும் ஒரே ஒரு விஷயம். கற்புக்கரசியாம் கண்ணகி தேவி மதுரை மாநகரை எரித்துவிட வில்லையா?"

இப்படிப் பேசிக் கொண்டே போகிறவர்களும் உண்டு. கூட்டத்திலிருந்து கடைசி மனுஷர் எழுந்து போகிற வரையில் இவர்களுடைய கடைசி விஷயம் முடியாது!

• • •

சரி; நீங்கள் படும் வேதனை எனக்குத் தெரிகிறது. அடுத்த கட்டுரைகளைப் படிப்பதற்கு உங்களுக்கு அவகாசம் வேண்டுமல்லவா? கடைசியில் ஒரு விஷயம். உங்கள் பொறுமைக்கு என் மனமார்ந்த நன்றி!

---

# விடுமுறை விபரீதம்!

என். என்.

வழக்கமாக ஞாயிற்றுக்கிழமை தோறும் சலவை செய்யப்பட்ட துணிகளைக் கொண்டு வரும் சின்னான் நேற்று ஏனோ வரவில்லை.

எனவே அவனைத் தேடிச் சென்று, “ஏனப்பா துணிகளைக் கொண்டு வரவில்லை? ...... இன்று ஞாயிற்றுக் கிழமையல்லவா?...... நான் அவசரமாக வெளியே போக வேண்டுமே!” என்று சற்றுக் கோபத்துடன் பேசினேன்.

“உங்களுக்குத் தெரியாது போலிருக்கிறது!...வாரத்தில் ஒரு நாள் எல்லாத் தொழிலாளிகளுக்கும் விடுமுறை கொடுக்க வேண்டும் என்று இப்பொழுது சட்டம் வந்திருக்கிறதே! கடைகளிலும் காப்பி ஹோட்டல்களிலும் இன்னும் இதர இடங்களிலும் எல்லாத் தொழிலாளிகளுக்கும் வாரத்தில் ஒரு நாள் ஓய்வு கொடுக்கவேண்டுமென்று முழங்கி வருவது உங்களுக்குத் தெரியாதா?” என்றான்.

“அப்படியென்றால், இன்று துணிகளைக் கொண்டு வந்து தரமாட்டாயா?” என்று கேட்டுவிட்டு நேராகச் சலூனுக்குப் புறப்பட்டேன்.

சலூன் கதவின்மீது பின் வருமாறு எழுதியிருந்தது.

“பிரதி ஞாயிறு தோறும் கடைக்கு விடுமுறை.”

கடைத்தெரு வழியாக வெகு தூரம் சென்று பார்த்தேன். எல்லா சலூன்களும் பூட்டப்பட்டிருந்தன!

ஏமாற்றத்தாலும் கோபத்தாலும் என் வயிற்றில் திடீரென்று பசி தோன்றவே, ஹோட்டலுக்குச் சென்று காப்பியாவது சாப்பிடலாமென்று திரும்பினேன்.

விதி என்னைச் சோதிப்பதென்றே கங்கணம் கட்டிக்கொண்டிருந்தது என்பதை அப்பொழுதுதான் உணர்ந்தேன்.

எல்லாக் காப்பி ஹோட்டல்களும் இறுகப் பூட்டப் பட்டிருந்தன!

‘வாரத்தில் ஒரு நாள் விடுமுறை — ஞாயிறுதோறும் மூடப்பட்டிருக்கும்’ என்ற விளம்பரப் பலகை என் கண்ணை உறுத்தியது. நேராக வீட்டுக்குத் திரும்பி வந்து, “மீனு! மீனு!” என்று கூப்பிட்டேன்.

பதில் வரவில்லை.

சற்று ஆச்சரியத்துடன், உள்ளே சென்று ஒவ்வொரு அறையாகப் பார்த்தேன். மீனுவைக் காணோம்.

என் சிறிய மைத்துனன் வெங்குவைப் பார்த்து, “ஏண்டா, உன் அக்கா எங்கே போயிருக்கிறாள்?” என்று கேட்டேன்.

“சற்று முன்பு, யாரோ நாலைந்து பெண்கள் வந்தார்கள். எங்கேயோ ‘லேடீஸ் கிளப்பி’ல் அவசரமாகக் கூட்டமாம்! போய்ச் சீக்கிரம் திரும்பி வந்து விடுவதாகச் சொல்லிவிட்டு, அக்கா அவர்களுடன் போனாள்!” என்று அவன் சொல்லிக்கொண்டிருக்கும் பொழுதே மீனு வந்து சேர்ந்தாள்.

“எங்கே போயிருந்தாய்?” என்று கேட்டேன். மீனு சொன்னாள்:

“நாங்கள் எல்லோரும் இன்று எங்கள் கிளப்பில் ஒரு ‘மீட்டிங்’ நடத்தி, ஒரு அவசரத் தீர்மானம் நிறைவேற்றியிருக்கிறோம்! உலக முழுவதும் இப்பொழுது தொழிலாளிகளுக்கு வாரத்தில் ஒரு நாள் ஓய்வு கொடுக்கப் படுகிறதல்லவா? அது மிகவும் நியாயமானது, அவசியமானது என்பதை எல்லோரும் ஒப்புக்கொண்டோம். அதேமாதிரி, ஸ்திரீகள் எல்லோரும் வாரத்தில் ஒரு நாள் வீட்டு வேலையிலிருந்து ஓய்வு எடுத்துக் கொள்ள வேண்டியதும் மிக மிக அவசியந்தான் என்பதைப் பற்றி எல்லோரும் பேசினோம். ஏன் ஒருமாதிரி பார்க்கிறீர்கள்? எங்களுக்கு மாத்திரம் விடுமுறை வேண்டாமா? நாங்களும் தொழிலாளிகள்தானே? நாங்கள் எப்பொழுதுதான் ஓய்வு எடுத்துக் கொள்வது? ஆகவே, பிரதி ஞாயிற்றுக் கிழமை தோறும் நாங்கள் வீட்டு வேலை ஒன்றும் செய்வதில்லை என்று தீர்மானித்திருக்கிறோம்! இன்றைய தினத்திலிருந்தே அந்தத் தீர்மானத்தை அமுலுக்கும் கொண்டுவந்து விட்டோம்” என்றாள்.

# அடித்துத் துவைப்பதாலேற்படும் வீண் நாசத்தைப் போக்குங்கள்—இம்மாதிரி உடைகளைச் சலவை செய்யுங்கள்



பழைய முறையில் அடித்துத் துவைத்துச் சலவை செய்வதால் உடைகள் அநாவசியமாய் நைந்தும், கிழிந்தும் போகின்றன—இந்தப் பாழுக் கோறத்தால் நீங்களும் உங்கள் நண்பர்களும் அடிக்கடி கவலைக்குள்ளாகிறீர்கள்.

2



1





3

எண்களிடப்பட்ட இந்தப் படங்களில் காட்டப்படும் முறையைப் பின்பற்றுங்கள். கீழே தரப்படும் புத்திமதிகளைக் கையாளுங்கள். உங்கள் உடைகள் யாதொரு தீங்குமின்றி உண்மையில் சுத்தமாய்ச் சலவை செய்யப்படு மென்பதைப்பற்றி நீங்கள் உறுதியாய் நம்பியிருக்கக்கூடும்.

4



(1) சலவை செய்யவேண்டிய உடையை நன்றாக நனையுங்கள்—குழாய், தொட்டி, குளம், ஆறு அல்லது ஓடை ஆகிய இவற்றை நீங்கள் உபயோகிக்கலாம். அதனால் யாதொரு வித்தியாசமும் இல்லை.

(2) நன்றாக உடை நனைந்தபிறகு ஸன்லைட் சோப்பை அதன்மீது முழுவதும் தேயுங்கள். (அழுக்கேறின பாகத்தில் ஸன்லைட்டைத் தாராளமாகத் தடவவும்).

(3) சோப் உடை முழுவதும் பரவக் கசக்கவும் (சப்பாத்தி செய்ய மாவை எப்படி நீங்கள் பிசைகிறீர்களோ அப்படிச் செய்யவும்). துணியின் இழையில் சோப் நுரை படும்படி அதை முழுவதும் கசக்கிப் பிழியுங்கள். முரட்டுத்தனமாக துணியைத் தேய்க்கவேண்டிய அவசியமே இல்லை. அழுக்குள்ள இடங்களிலெல்லாம் நுரை படும்படி தேய்த்துக் கசக்கினால், ஸன்லைட்டின் சுயமாக வெளுக்கும் நுரை எல்லா அழுக்கையும் மெதுவாகப் போக்கிவிடும். இந்த சக்திவாய்ந்த நுரையிலுள்ள "சிறந்த" சோப் பட்டமாத்திரத்தில் ஆடையிலுள்ள அழுக்கு நீங்கிப்போய் நுரையிற் சேர்ந்துவிடுகிறது. ஆகையினாலே துணியை நுரையிலிருந்து அலசிக் கழுவும்போதே அழுக்கையும் நீங்கள் அகற்றிவிடுகிறீர்கள்.

(4) அழுக்கு இப்பொழுது அடங்கியிருக்கிற நுரையை ஆடையிலிருந்து போகும்படி அலசிச் சுத்தம் செய்யுங்கள்.

இந்த மிருதுவான ஸன்லைட் முறைப்படி துணிகளைச் சலவை செய்தால் அவை வெகுநாளைக்கு நீடித்துவரும்.




## ஸன்லைட் சோப்
## துணிகளைப் பாதுகாக்கிறது

S. 70-23 TM

LEVER BROTHERS (INDIA) LIMITED

# ஸாரிடோன்




**சகல விதமான வலிகளையும்**
**10 நிமிஷங்களில் நிறுத்துகிறது**

மற்றேனைய ப்ரிஸில்களை
விடவும் மாறுபட்டது

1. உங்கள் பற்களை 60% அதிக செம்மையாகத் துலக்குகிறது

2. விஷக் கிருமிகளகற்றப் பட்ட கிலாஸ் ட்யூபுகளில் ஸீல் செய்யப்பட்டது.

3. நீர் கடக்காது — நனைவுமேற்காது

4. ஒரு வருட உத்தர வாத முடையது.

இப்பொழுது ஸ்டோர்களில்—




மிருகங்களின் மயிரே கிடையாது!




விநியோகஸ்தர்கள் :

எல். டி. ஸெய்மூர் & கோ (இந்தியா) லிமிடெட்

12/A, லிங்க செட்டித் தெரு, தபால் பெட்டி 200, மதராஸ்

# டாக்டர் வெஸ்ட்ஸ்

## டூத் பிரஷுகளும் டூத் பேஸ்டும்

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
No. 116-110, Stadens Garden, Poonamalle High Road, Kilpauk, Madras.

ஆடவர்கள் விரும்புவது அழகுள்ள மங்கையர் மங்கையரின் இயற்கைப் பொலிவைப் பன்மடங்காகப் பெருக்குவது ஆபரணங்கள் அழகுக்கு அழகு செய்யும் ஆபரணங்களை புதுப்புது ரகங்களில் செய்வதில் அரை நூற்றாண்டுக்கு மேலாக அனுபவம் பெற்றிருக்கிறோம் தங்கள் தேவைகளை தயவுசெய்து தெரிவியுங்கள்.









# வீகம்ஸீ

..சைனா பஜார் மதராஸ்..

KITTU'S

Regd. No. M 4392

# சார்லீஸ் டீ




அழகிய
பாக்கெட்டுகளில்
காற்றுப் புகாத
உறைகளில்

# பிஸ்கட்ஸ்

**CHARLEY & CO., USILAMPATTI.**

Agents For Salem & N. Arcot Dts. The General Agencies Corporation, First Agraharam, Salem. Agents For Nilgris: Messrs. Brilliant Traders, Ootacamund.